Regd M No. 7897 Phone No. 76190, 76189

"நவமணி"
சந்தா விகிதம்
1—9—74 முதல்
தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. [illegible]-00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45-00 | ரூ. 48-00 |
| 1 வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |


# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி
சென்னை 11—7—75 வெள்ளி வெளியூர் 12—7—75 சனி



# தி. மு. க. பிரமுகர்கள் திடீர் கைது

## ஆட்சேபகரமான மாநாடு நடத்த முயன்றனராம்

சென்னை, ஜூலை 11— ஆட்சேபகரமான மாநாடு ஒன்றை நடத்த முற்பட்டதாக முரசொலி அடியார், பெருஞ்சித்திரனார் ஆகியோர் உள்பட 7 பேர் இன்று திடீரென்று முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக கைது செய்யப்பட்டனர்.

வருகிற ஞாயிற்றுக்கிழமை மாலையில் சென்னை கடற்கரையில் அவர்கள் இந்த மாநாட்டை நடத்த உத்தேசித்திருந்தார்களாம்.

அரசுக்கு எதிராக ஆட்சேபகரமான கூட்டத்தை நடத்த அவர்கள் முயன்றதாகவும் கூறப்படுகிறது. "நீட்போல்" பத்திரிகையில் ஆட்சேபகரமான பகுதிகளை அவர்கள் வெளியிட்டதாகவும் சொல்லப்படுகிறது.

கைது செய்யப்பட்டவர்கள் பின் வருமாறு: முரசொலி அடியார், பெருஞ்சித்திரனார், ப. முருகவேள், ந. இளஞ்செழியன், நா. இளமாறன், மறைநித்தவில்லனர், அரிமா மகிழ்கோ ஆகியோர்.

சென்னை நகரில் புதிய போலீஸ் கமிஷனர் கே. ராதாகிருஷ்ணன் இன்று நிருபர்களிடம் மேற்கண்ட தகவல்களை வெளியிட்டார்.

"நீட்போல்" பத்திரிகையின் பிரதிகள் பறிமுதல் செய்யப்பட்டன.

கைது செய்யப்பட்டவர்களில் சிலர் தி. மு. க. பிரமுகர்கள் என்று கூறப்படுகிறது.



### கட்சியிலிருந்து தி. மு. க. பிரமுகர் சஸ்பெண்ட்

சென்னை, ஜூலை 11— "நீட்—போல்" என்ற பெயரில் சென்னையிலிருந்து வெளிவரும் தினசரிப் பத்திரிகையின் நிறுவனர் "முரசொலி" அடியார் தி. மு. கழகத்திலிருந்து "சஸ்பெண்ட்" (தற்காலிக நீக்கம்) செய்யப்பட்டுள்ளார்.

இதுகுறித்து தி. மு. கழகப் பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் இன்று விடுத்துள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:

"நீட்போல்" பத்திரிகையின் நிறுவனர் அடியார், தி. மு. கழகக் கொள்கை, கோட்பாடுகளுக்கு புறம்பாக செயல்படுவதன் காரணமாக அவரிடம் உரிய விளக்கம் கேட்கப்பட்டிருக்கிறது.

இதனை யொட்டி அடியார், இன்றிலிருந்து தி. மு. கழகத்திலிருந்து தற்காலிகமாக நீக்கி வைக்கப்பட்டிருக்கிறார்.

மேற்கண்டவாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

### பரிசு சீட்டு குலுக்கல் முடிவுகள்

சென்னை, ஜூலை 11— தமிழக அரசின் கடைசி பரிசு சீட்டுக் குலுக்கல் முடிவுகள் இன்று அறிவிக்கப்பட்டுள்ளன. அவை விவரம் வருமாறு:—

**சிறப்பு பரிசு**

1 லட்சம் சிறப்புப் பரிசு
M. K. 545677
மதுரை மாவட்டத்திற்குக் கிடைத்துள்ளது.

**M. K. வரிசை**

முதல் பரிசு 118418
வட ஆற்காடு மாவட்டத்திற்கு கிடைத்துள்ளது
எம்.கே. வரிசையில் இரண்டாவது பரிசு 10 ஆயிரம் ரூபாய்.
792766
865455

**M. L. வரிசை**

முதல் பரிசு 608020
(சென்னைக்கு கிடைத்துள்ளது)
இரண்டாவது பரிசு
936338
575097

**MM வரிசை**

முதல் பரிசு 250229
(கோவைக்கு கிடைத்துள்ளது)
இரண்டாவது பரிசு
744984
447600

**MN வரிசை**

முதல் பரிசு 105040
([illegible]க்கு கிடைத்துள்ளது)
இரண்டாவது பரிசு
847651
205984

**MO வரிசை**

முதல் பரிசு 220868
இரண்டாவது பரிசு
883208
002214

### நெடுஞ்செழியன் பிறந்த நாள்: கருணாநிதி வாழ்த்து

சென்னை, ஜூன் 11— தி. மு. க. பொதுச் செயலாளரும் தமிழக கல்வியமைச்சருமான நெடுஞ்செழியனின் 56-வது பிறந்த நாளான இன்று முதலமைச்சர் கருணாநிதி அவருடைய வீட்டிற்கு நேரில் சென்று அவருக்கு மாலை அணிவித்து, வாழ்த்தினார்.

அமைச்சர் நெடுஞ்செழியன் தனது பிறந்த நாளான இன்று காலை 6-30 மணிக்கு அண்ணா, பெரியார் சமாதிகளுக்குச் சென்று மலர்வளையம் வைத்து வணங்கினார். அண்ணா, பெரியார் சிலைகளுக்கும் மலர் மாலைகள் அணிவித்தார்.

காலையில் 7-30 மணிக்கு அவர் தமது வீட்டில் "கேக்" வெட்டி அனைவருக்கும் வழங்கினார். விழாக் குழுசார்பில் நெடுஞ்செழியனுக்கும் அவரது துணைவியார் விசாலாட்சி நெடுஞ்செழியனுக்கும் மு. வரதராசன மாலைகள் அணிவித்தார்.

அமைச்சர்கள் அன்பழகன், அன்பில் தர்மலிங்கம், மன்னை நாராயணசாமி, மாதவன், ராஜாராம், சாதிக் பாட்சா, கண்ணப்பன், ராஜாங்கம், சி. வி. எம். அண்ணாமலை, ஓ. பி. ராமன், ப. உ. சண்முகம், மேலவைத் தலைவர் சி. பி. சிற்றரசு, மேலவை துணைத் தலைவர் ம. பொ. சிவஞானம் ஆகியோர் நெடுஞ்செழியனுக்கு மலர் மாலை அணிவித்து வாழ்த்து தெரிவித்தனர்.

#### முதலமைச்சர்

முதலமைச்சர் கருணாநிதி சரியாக 9-30 மணிக்கு கல்வி அமைச்சரின் இல்லத்திற்கு வந்தார். நெடுஞ்செழியனுக்கு பிறந்தநாள் வாழ்த்து தெரிவித்து அவர் மாலை அணிவித்தார்.

புகைப்படக்காரர்கள் போட்டி போட்டுக்கொண்டு படம் எடுத்தனர். அப்போது திருமதி விசாலாட்சி நெடுஞ்செழியன் ஒரு மாலையை எடுத்து முதலமைச்சரிடம் கொடுத்து அணிந்துகொள்ளச் சொன்னார்.

#### கருணாநிதி தமாஷ்

"அவருக்குப் பிறந்த நாள் நான் மாலை அணிவித்து விட்டேன். நான் எதற்கு மாலை போட்டுக்கொள்ள வேண்டும்?" என்றார் முதலமைச்சர்.

திருமதி விசாலாட்சி நெடுஞ்செழியனும், புகைப்படக்காரர்களும் வற்புறுத்தியதன் பேரில் முதலமைச்சர் கருணாநிதி அப்படியே மாலையை அணிந்துகொண்டார்.

"பெண்கள் மாலை அணிவிப்பதைப் பார்த்தால் வழியனுப்புவதுபோல் இருக்கிறது" என்றும் கருணாநிதி தமாஷாகக் குறிப்பிட்டார். கூடியிருந்தவர்களிடையே பலத்த சிரிப்பொலி எழுந்தது.

அமைச்சர் நெடுஞ்செழியன் நாடாளுமன்ற தி.மு.க. தலைவர் இரா. செழியன் ஆகியோருடன் சிறிது நேரம் பேசிவிட்டு முதலமைச்சர் விடைபெற்றுச் சென்றார்.

போலீஸ் ஐ. ஜி. அருள், சென்னை போலீஸ் கமிஷனர் ராதாகிருஷ்ணன், தொழிலதிபர் எம். ஏ. எம். ராமசாமி, நகரப் பிரமுகர்கள், தி. மு. கழக நாடாளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்கள், மாவட்ட தி.மு.க. செயலாளர்கள் கட்சி பிரமுகர்கள் முதலானோர் வருகை தந்து மந்திரிக்கு கைத்தறி ஆடைகளையும், மலர்மாலை

1-ம் பத்தி பார்க்க

### மாணவர் விடுதியில் திருட்டு: 2பேர் கைது

சென்னை, ஜூலை 11— சென்னை ஸ்டான்லி மருத்துவ கல்லூரி மாணவர் விடுதியில் 2,000 ரூபாய் மதிப்புள்ள மின்சார மோட்டார் திடீரென்று திருட்டுப் போயிற்று. இது சம்பந்தமாக அதே கல்லூரி மாணவர் வெங்கட்ராம விஜய பிரதாப், மற்றும் சேகர் ஆகிய 2 பேர் கைது செய்யப்பட்டனர்.

### சென்னை குடிநீர் பஞ்சம்

## ஆய்வு நடத்த ஐ. நா. வுக்கு மத்திய அரசு கோரிக்கை

சென்னை, ஜூலை 11— சென்னை நகர குடிநீர்ப் பஞ்சத்தைப் போக்குவதற்காக ஆய்வு மேற்கொள்ளும்படி ஐ. நா. அபிவிருத்தி திட்ட நிறுவனத்தை இந்திய அரசு கேட்டுக் கொள்ளும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

சென்னை நகரிலும், அதன் சுற்றுப்புற வட்டாரங்களிலும் காணப்படும் கடுமையான குடிநீர்ப்பஞ்சத்தைப்போக்குவதற்கான வழிகள் பற்றி ஆய்வு நடத்தி சிபாரிசுகளைத் தாக்கல் செய்யும்படி ஐ நா. அபிவிருத்தி திட்ட நிறுவனத்திற்கு விரைவில் மத்திய அரசு வேண்டுகோள் அனுப்பும் என்று தெரிகிறது.

இந்த வேண்டுகோள் கிடைத்தவுடன் இந்தப் பணியினை உலக சுகாதார நிறுவனத்திடம் ஐ. நா. அபிவிருத்தி திட்ட நிறுவனம் ஒப்படைத்து விடும் என்று தெரிகிறது. இதற்காக சுமார் 2 கோடிரூபாய் நிதிஉதவியை ஐ. நா. அபிவிருத்தி திட்ட நிறுவனம் வழங்கும். இந்த ஆய்வுப்பணி அடுத்த 2 வருட காலத்திற்குள் முடியடைந்து விடும்.

1991-ம ஆண்டில் சென்னை பெருநகரின் மக்கள் தொகை 60 லட்சமாக உயர்ந்துவிடும், அதற்குத் தக்கபடி செய்ய வேண்டிய தண்ணீர் வசதிகள் குறித்தும், அதற்குத் தேவையான நிதி பற்றியும் பரிந்துரைகளை உலக சுகாதார நிறுவனம் அளிக்கும்.

அந்தப் பரிந்துரைகள் கிடைத்தவுடன், உலக வங்கியிடம் நிதி உதவி கோரப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

ஆனால் சென்னை நகரின் குடிநீர்ப் பஞ்சத்தைப் போக்க அவசர நடவடிக்கையாக கோதாவரி அல்லது கிருஷ்ணா ஆற்றிலிருந்து சென்னை நகருக்கு தண்ணீர் கொண்டுவர ஏற்பாடு செய்யப்படவேண்டும என்று தமிழ்நாடு அரசின் சார்பில் வற்புறுத்தப் பட்டுள்ளது.

### கேரளத்தில் 200பேர் கைது

திருவனந்தபுரம், ஜூலை 11—கேரளத்தில் பல்வேறு பகுதிகளில் நேற்று தடை உத்தரவை மீறியதாக 200க்கு மேற்பட்டவர்கள் கைது செய்யப்பட்டனர்.

அவர்களில் எதிர்க்கட்சி தலைவர்களும் அடங்கியுள்ளதாக கூறப்படுகிறது.

7-ம் பத்தி தொடர்ச்சி

களையும் அணிவித்தனர்.

ஏழை மாணவர்களுக்கு வழங்குவதற்கென்று நோட்டுப் புத்தகங்களும், சிலேட்டுகளும் கொடுக்கப்பட்டன.

இதுவரையில் 75 ஆயிரம் நோட்டுப்புத்தகங்களும், 10 ஆயிரம் சிலேட்டுகளும், பல ஆயிரம் பென்சில்களும் குவிந்துள்ளன. இவைகள் ஏழை மாணவர்களுக்கு பள்ளிகளில் வழங்கப்படும்.

அறநிலையப் பாதுகாப்புத் துறையின் சார்பில் 50 ஆயிரம் நோட்டுப் புத்தகங்களை வழங்குவதாக அமைச்சர் கண்ணப்பன் தெரிவித்துள்ளார்.

தமிழ்நாட்டில் உள்ள பல முக்கிய கோவில்களின் சார்பில் அமைச்சருக்கு மாலைகள் அணிவிக்கப்பட்டு பிரசாதங்கள் வழங்கப்பட்டன.

### அமைச்சர் என். வி. என். உடல்நிலை

சென்னை, ஜூலை 11— தமிழக பிற்பட்டோர் நலத்துறை அமைச்சர் என். வி. நடராசன் ஈரல நோய் காரணமாக சென்னை அரசாங்க, பொது மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகிறார் அல்லவா? அவருடைய உடல் நிலை இப்போது தேறி வருகிறது. அவரைப் பார்க்க வருபவர்களிடம் அவர் நன்ருகப் பேசுகிருர். இவ்வாறு டாக்டர்கள் தெரிவித்தனர்.

### ரெயிலில் ஓசிப் பயணம்: 8 ஆயிரம் பேர் சிக்கினர்

பம்பாய், ஜூலை 11— நேற்று ரெயில்வேயைச் சேர்ந்த ரெயில்களில் 'திடீர்' சோதனை நடத்தியதில், டிக்கெட் இல்லாமல் ஓசிப்பயணம் செய்ததாக 8 ஆயிரம் பேர் பிடிபட்டனர். அவர்களிடமிருந்து ரூ. 1 லட்சம் அபராதத் தொகையும் வசூலிக்கப்பட்டது.

லக்னோவில் நேற்று மட்டும் 4 ரெயில்களில் சோதனையிட்டதில் ஓசிப்பயணம் செய்ததாக 65 பேர் பிடிபட்டனர். அவர்களில் 60 பேரிடம் அபராதத் தொகை வசூலிக்கப்பட்டது.

### தங்க கடத்தல்: சென்னையில் 4 பேர் கைது

சென்னை, ஜூலை 11— இலங்கையிலிருந்து தங்கம் கடத்தியதாக ஹனிசா பாய், நூன், அன்துவான் முதலிய 3 பேர் சென்னையில் கைது செய்யப்பட்டனர்.

23,600 கிராம் தங்க கம்பிகள், 11,750 கிராம் தங்கச் சங்கிலி முதலியவை அவர்களிடமிருந்து பிடிபட்டன.

### தேடப்பட்ட 2பேர் கைது

சென்னை, ஜூலை 11— கள்ளக்கடத்தல் சம்பந்தமாக தேடப்பட்ட பீர் முகமது யூசுப் ஆகிய 2 பேர் சென்னையில் கைது செய்யப்பட்டனர்

## விலைப்பட்டியல் வைக்காததால் 20 பேர் கைது

சண்டிகார், ஜூலை 11— கடைகளில் விலைப் பட்டியல் எழுதி வைக்காததால், அரியானு மாநிலத்தில் 20 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

"அத்தியாவசியப் பண்டங்கள்" சட்டப்படி அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப் பட்டுள்ளது.

கோதுமையைப் பதுக்கி வைத்திருந்ததாக 168 பேர் அங்கு கைதாகியுள்ளனர்.

இந்த நடவடிக்கையின் மூலம் அங்கு கடுகு எண்ணெய் வனஸ்பதி, சர்க்கரை முதலியவற்றின் விலைகள் இறங்கியுள்ளன.

#### கேரளாவில் கைது

கடையில் விலைப்பட்டியல் எழுதிவைக்காததற்காக கேரளாவில் ஒரு வியாபாரி கைது செய்யப்பட்டுள்ளார்.

## 74 யானைகள் பிடிபட்டன

ஷில்லாங், ஜூலை 11— இந்தியாவின் வடகிழக்கு பகுதியில் உள்ள மேகாலயா மாநிலத்தில் கடந்த சில மாத காலத்தில் 74 யானைகள் பிடிபட்டன.

காரோ குன்று மாவட்டத்தில் உள்ள காடுகளில் தான் இந்த யானைகளின் பெரும் பாலானவை பிடிபட்டன.

மாநில அரசின் அனுமதி பெற்று தனியார் இவ்விதம் யானைகளைப் பிடித்து விற்கிறார்கள்.

இந்த யானைகளில் பெரும்பாலானவை, பீகார் வியாபாரிகளுக்கு விற்கப் படுகின்றன. மீதியுள்ளவை அமெரிக்காவுக்கும், மேற்கு ஜெர்மனிக்கும் ஏற்றுமதி செய்யப்படுகின்றன.

### வாசகர்களுக்கு ஓர் அறிவிப்பு

அருட்பெருஞ்ஜோதி
இராமலிங்க வள்ளலார் அருளிய
சமரச சுத்த சன்மார்க்கக் கொள்கை விளக்கவுரை

"நவமணி" இதழில் 10—7—'75 முதல் தினந்தோறும் "தயவுப் பெரு நெறி" என்ற தலைப்பில், அருட்பிரகாச இராமலிங்க வள்ளலார் அவர்களின், சமரச சுத்த சன்மார்க்கக் கொள்கைகளை திண்டுக்கல் சத்திய ஞான கோட்டம் தவத்திரு சுவாமி சரவணனந்தா அவர்கள் எழுதி வருகிறார்கள். வாசகப் பெருமக்கள் படித்து அருளின்பம் பெறுவார்களாக.

—ஆசிரியர்

## வானொலி

சனி ஜூலை 12

சென்னை-1
(416.7 மீ)

காலை
5-55 வந்தே மாதரம்
6-05 குறளமுதம்
6-10 வழிபாட்டிசை
6-30 மதுரை சோமு (இ.த.)
7-00 தமிழ்மணம்
7-25 மீண்டும் கேட்போம்
7-35 மெல்லிசை
7-45 திரைகானம்
8-00 கே. ஆர். கணபதி —புல்லாங்குழல்
9-15 திரைப்பாடல்கள்
9-30 ஒலிபரப்பு முடிவு

பகல்
11-35 பள்ளி ஆசிரியர்களுக்கு
12-02 திரை மெட்டுகள்
12-50 மெல்லிசை
1-00 பார்வதி ராமன் —பாட்டு
1-30 திரைகானம்
2-10 திருச்சி அஞ்சல்
2-30 ஜெயலக்ஷ்மி ராமசாமி —பாட்டு
3-00 வ. சி. பத்மா—வீணை
4-00 ஒலிக்கதிர்
4-45 ஜெயலக்ஷ்மி ராமசாமி —பாட்டு

மாலை
5-00 ஒலிக்கதிர்
5-10 பாடப்பயிற்சி
5-20 ஏற்றுமதி விளக்கம் (ஆங்கிலம்)
5-30 மழலையமுதம்
6-00 திரைப் பாடல்கள்
6-15 வாத்திய விருந்து
7-00 திரைகானம்
7-25 விவசாயிகளுக்கு
8-00 பட்டது போதும் (2) வில்லுப்பாட்டு
8-30 தபால்பெட்டி
8-45 தாளவாத்தியக் கச்சேரி
9-15 நலம் செய்யும் நஞ்சு —சித்திரம்
9-30 அ. பா. சங்கீதம் — ஸிதார்
11-00 உலகச் செய்திகள்
11-05 வானிலை—முடிவு

சென்னை-2
(211.3 மீ)

காலை
6-55 வந்தேமாதரம்
7-00 செய்திகள் (ஆங்கிலம்)
7-15 சுனந்தா பட்நாயக் —பஜன்
7-30 ஹுமதொ (கன்னடம்)
9-00 சமஸ்கிருதச் செய்தி
9-05 ... (ஆங்கிலம்)
9-10 ... முடிவு

பகல்
12-40 ...ய இசை
1-30 ...பு முடிவு

மாலை
4-15 ஸ்போர்ட்ஸ்
5-55 திரை மெட்டுகள்
6-00 மேற்கத்திய இசை
6-30 & 7-15 இளைய பாரதம்

இரவு
8-00 ஸ்போர்ட்ஸ்
8-05 இளையபாரதம்
8-15 டி. ஆர். மகாலிங்கம் (இ. த.)
9-00 வாத்திய விருந்து
9-15 ஸ்பாட்லைட்
9-30 தெலுங்கு நிகழ்ச்சி
10-00 மேற்கத்திய இசை
11-00 ஒலிபரப்பு முடிவு

திருச்சி
(319. மீ)

காலை
6-00 வந்தேமாதரம்
6-10 பாமாலை
6-20 நெறிவிளக்கம்
6-30 விவசாயிகளுக்கு
6-35 துதிப்பாடல்கள்
7-00 கந்தபுராணம் —பேச்சு
7-25 தேவாரப்பயிற்சி
7-35 ஸ்ரீ பார்த்தசாரதி சுப்ரபாதம்
8-20 திரைப்பட இசை
9-00 ஒலிபரப்பு முடிவு

பகல்
11-05 தொடக்கப்பள்ளி ஆசிரியர்களுக்கு
12-02 வாத்திய இசை
12-50 தேசபக்திப் பாடல்கள்
1-00 கே. எஸ். நாராயணன் —புல்லாங்குழல்
2-10 கிராம மகளிர் அரங்கம்
2-30 ஒலிபரப்பு முடிவு

மாலை
5-30 பிள்ளைக்கனியமுது
6-10 நாட்டுப்பாடல்கள்
6-40 கிராம நிகழ்ச்சி
7-25 விவசாயிகளுக்கு
8-00 இளையபாரதம்
8-30 காலனின் வாகனம் —நாடகம்
9-15 கவிச்சொல் கேளீர்
9-30 அ. பா. இசை —(டெல்லி அஞ்சல்)
11-30 ஒலிபரப்பு முடிவு

சென்னை 1-ல் தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15. ஆங்கிலத்தில் செய்தி பகல் 12-00, மாலை 2-00, 6-00, இரவு 9-00. மாநிலச்செய்திகள் பகல் 12-30, 6-30.

திருச்சி: தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15

ஆங்கிலத்தில் செய்தி: காலை 8-10, 12-00, 2-00, 6-00, 9-00.

விவிதபாரதி: இரவு 8-05 ரசிகர் தேன் கிண்ணம்: 9-15 ஓடும் பஸ்ஸில் ஒருநாள்—நாடகம்

# மில் ஊழியர் குறைகளை தீர்க்க இரு தரப்புக்குழு: மத்திய அரசு சம்மதம்

புதுடெல்லி, ஜூலை 11—மில் ஊழியர் தகராறுகளைத் தீர்த்து வைக்க இரு தரப்புக் கமிட்டியை அமைக்க மத்திய அரசு ஒப்புக்கொண்டது.

அரசாங்கம், தொழில் அதிபர்கள், தொழிலாளர்கள் ஆகிய முத்தரப்புப் பிரதிநிதிகளும் பங்குகொண்ட ஒரு கூட்டத்தில் இம்முடிவு எடுக்கப்பட்டது.

தொழிலாளர் நல அமைச்சர் கே. வி. ரகுநாத ரெட்டி, கூட்டத்துக்குத் தலைமை தாங்கினார். தொழில் சிவில் சப்ளை மந்திரி டி. ஏ. பை, வர்த்தக மந்திரி டி. பி. சட்டோபாத்யாயா ஆகியோர் கூட்டத்தில் பேசினார்கள்.

தேசியப் பஞ்சாலைக் கார்ப்பொரேஷனின் கீழ் மேற்கண்ட கமிட்டி செயல்படும். உற்பத்தியைப் பாதிக்கும் அம்சங்களையும் இந்தக்குழு கவனிக்கும்.

இது தவிர, பஞ்சாலைத் தொழிலை மொத்தமாக கவனிப்பதற்கும் ஒரு தனி தேசிய இரு தரப்பு அமைப்பு ஏற்படுத்தப்படும். பஞ்சாலைத் தொழிலின் சக்தியைப் பூரணமாகப் பயன்படுத்துவதையும் அத்தொழில் சுமுகமாகச் செயல்படுவதையும் இது கவனித்துக் கொள்ளும். தொழிலாளர்-நிருவாகத்தினர் உறவு பாதிப்பின் காரணமாக ஏற்படும் பிரச்னைகள் எல்லாவற்றையும் இந்த அமைப்பு தீர்த்துவைக்கும்.

### உற்பத்தியை பெருக்க யோசனை

வாரத்தில் 7 நாட்களும் பஞ்சாலைகள் வேலை செய்வதற்கும் ஒவ்வொரு நாளும் 3 ஷிப்டுகள் வேலை செய்வதற்கும் எடுக்கவேண்டிய நடவடிக்கைகளைப் பற்றித் தொழில் அதிபர்கள் யோசனை கூறினார்கள்.

நிருவாகத்தில் தொழிலாளர்கள் பங்கு கொள்ளும் யோசனையைப் பொருத்தவரை, அதை ஒவ்வொரு கட்டமாக, படிப்படியாக அமல்படுத்தவேண்டும் என்ற விருப்பத்தையும் அவர்கள் தெரிவித்தார்கள்.

தொழிலாளர் நல மந்திரி கே. வி. ரகுநாத ரெட்டியின் வேண்டுகோளைத் தாங்கள் ஏற்பதாகவும் கதவடைப்புகள், லே-ஆப்கள் போன்றவற்றிற்கு வழி விடக்கூடிய நடவடிக்கைகளைத் தாங்கள் எடுக்கமாட்டோம் என்றும் அவர்கள் உறுதி கூறினார்கள்.

### லே-ஆப் இன்சூரன்ஸ்

லே-ஆப்கள் இன்சூரன்ஸ் திட்டம் ஒன்றை அமல்படுத்தலாம் என்றும், அதற்குத் தொழில் அதிபர்கள், தொழிலாளர்கள், அரசாங்கம் ஆகிய முத்தரப்பினரும் சமமாகப் பிரிமியம் கட்டி வரலாம் என்றும் ஒரு யோசனை தெரிவிக்கப்பட்டது.

### மந்திரிகள் பேச்சு

தொழில்களின் சக்தியைப் பூரணமாகப் பயன்படுத்தும்படி தொழில் அதிபர்களைப் பை கேட்டுக் கொண்டார். கடன்களுக்கு விதிக்கப்பட்டுள்ள கட்டுப்பாடு, அவ்வாறு முழு சக்தியைப் பயன்படுத்துவதற்கு ஒரு தடங்கலாக இராது. அதை உற்பத்தியுடன் இணைக்கலாம் என்று அவர் யோசனை கூறினார்.

### மலிவு விலை துணி

ஸ்டாண்டர்ட் துணி உற்பத்தி செய்ய வேண்டும் என்ற பொறுப்பைப் பெயரளவில்தான் பஞ்சாலைத்தொழில் நிறைவேற்றி வருகிறது. இது துரதிருஷ்டவசமானது. பஞ்சாலைத்தொழிலில் தனக்குரிய சமூகப் பொறுப்பை நிறைவேற்ற இது வழியாகாது என்றும் சட்டோபாத்யாயா கூறினார்.

தொழிலாளர் நலனைப் பலி கொடுத்து எந்தத் தரப்பினரும் லாபமடைய முயற்சி செய்யக்கூடாது என்று தொழிலாளர் நல மந்திரி ரகுநாத ரெட்டி எச்சரித்தார்.

### டாங்கே கருத்து

அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் தலைவர் எஸ். ஏ. டாங்கே, இந்திய தேசிய தொழிற்சங்க காங்கிரஸ் தலைவர் ஜி. ராமானுஜம் ஆகியோர் தொழிலாளர்களின் சார்பாக பேசினார்கள்.

தொழிலில் தங்களுக்குப் பங்கு இருக்கிறது என்ற உணர்ச்சியை தொழிலாளருக்கு ஏற்படுத்தவேண்டும். தொழிலாளர் சேவையின் முக்கியத்துவம் அங்கீகரிக்கப்படவேண்டும் என்று டாங்கே கூறினார். துணி வகைகள் குறையவேண்டும். அப்போதுதான் குறிப்பிட்ட வகைகளில் மில்கள் கவனம் செலுத்த முடியும். இன்னும் திறமையாகச் செயல்பட்டு, சாதாரண பொதுமக்களுக்குச் சேவை செய்ய முடியும் என்று ராமானுஜம் கூறினார்.

## பாட புத்தகம்: அரசு உத்தரவு

திருச்சி, ஜூலை 11— பள்ளிகளுக்கான 1975–76ம் ஆண்டு பாடப் புத்தகங்கள் பற்றி த. நா. அரசு கீழ்க்கண்ட உத்தரவு பிறப்பித்துள்ளது.

பாடப்புத்தகங்களை அரசே தயாரித்து வெளியிடுவது விஸ்தரிக்கப் பட்டிருப்பதால் தமிழ்நாடு பாடப்புத்தகக்குழு 7வது வகுப்பு முதல் 9வது வகுப்புகளுக்கான விஞ்ஞான கணித புத்தகங்களையும், 8வது 9வது வகுப்புகளுக்கான சரித்திரம், பூகோள நூல்களையும் ஆங்கிலத்தில் தயாரித்து வெளியிடுகிறது.

1975-76ல் பாட திட்டம் திருத்தியமைக்கப் படுவதால் அதன்படி 7வது வகுப்பு முதல் 9வது வகுப்புகளுக்கு கணித விஞ்ஞான புத்தகங்களை த. நா. பாடப் புத்தகக் குழு வெளியிடும். 8வது வகுப்பு தமிழ்ப் புத்தகமும், தமிழ் இலக்கண புத்தகமும் 8, 9வது வகுப்புகளுக்கு ஆங்கிலப் புத்தகமும், சரித்திர பூகோள புத்தகமும் வெளியிடும்.

அரசு பள்ளிகளில் சர்க்கார் வெளியிடாத பாடப் புத்தகங்கள் உபயோக விஷயத்தில் பள்ளி கல்வி டைரக்டர் பாடப் புத்தகங்களை தெரிந்தெடுப்பார்.

அமைச்சர் ராமச்சந்திரன் தகவல்

## சென்னையில் மேலும் 150 பஸ்கள் விடப்படும்

திருச்சி, ஜூலை 11— சென்னை நகரிலும், வெளியூர் ரூட்டுகளிலும் கூட்டத்தைச் சமாளிக்க பஸ்களின் எண்ணிக்கையை 10 சதவிகிதம் அதிகரிப்பது என்று அரசு முடிவு எடுத்துள்ளதாக போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரன் ஒரு பேட்டியில் கூறினார்.

இதன்படி சென்னை நகரில் மேலும் 150 பஸ்கள் விடுவது உட்பட தமிழ்நாட்டில் மேலும் 1000 பஸ்களைவிட வேண்டியிருக்கிறது என்று அமைச்சர் கூறினார்.

இதற்கான லைசென்சுகளை அளிப்பதை விரைவுபடுத்துமாறு பிராந்திய டெபுடி கமிஷனர்கள் கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளனர். அடுத்த 2 மாதங்களில் தேவையான பர்மிட்டுகள் வழங்கப்படுமென அவர் நம்பிக்கைத் தெரிவித்தார்.

பர்மிட் பெறுபவர்கள் அடுத்த 6 மாதத்துக்குள்ளாக 1000 பஸ்களைவிட ஆரம்பித்துவிடுவர் என்றும் அவர் நம்பிக்கை தெரிவித்தார்.

### ரோடு போக்கு வரத்துக் கழகம்

பல்வேறு போக்குவரத்து சிப்பந்திகளுக்கும் பயிற்சி அளிப்பதற்கென சென்னையில் ரோடு போக்குவரத்துக் கழகம் ஒன்றை அமைக்க தமிழக போக்குவரத்து இலாகா அனுமதி வழங்கியுள்ளதாகவும அமைச்சர் ராமச்சந்திரன் தெரிவித்தார்.

இக்கழகத்தை சென்னையில் அமைப்பதென தென் மாநில போக்குவரத்து அமைச்சர்கள் மாநாட்டில் முடிவு செய்யப்பட்டதாகவும் அவர் தெரிவித்தார். இக்கழகம தமிழக போக்குவரத்து இலாகாவின் கீழ் அமைக்கப் பட்டாலும இக்கழகத்தில் மற்ற மாநில அரசு போக்குவரத்துக் கழகங்களைச் சேர்ந்த சிப்பந்திகளுக்கும் பயிற்சி அளிக்கப்படும் என்றார் அவர். இக் கழகத்தில் நிர்வாகப் பயிற்சி அளிக்கப்படும் என்பதோடு இது ஆராய்ச்சிப் அபிவிருத்தி அமைப்பாகவும் செயல்படும் என்று அமைச்சர் ராமச்சந்திரன் கூறினார்.

பல்லவன் போக்குவரத்துக் கழகம் ஒரு செயல் திட்டத்தை தயாரித்து நிதி உதவி கோரி உலக பாங்கிடம் அளித்துள்ளதாக அவர் கூறினார்.

### ரெயில்வேக்கு கோரிக்கை

சென்னை நகர மக்களின் போக்குவரத்துத் தேவைகளைப் பூர்த்தி செய்வதில் ரெயில்வே இலாகாவும் முன்வரவேண்டும் என்று அமைச்சர் கோரினார். போக்குவரத்துத் தேவையில் பாதியை ரெயில்வே ஏற்க வேண்டும் என்றார் அவர். அப்படிச் செய்யாவிட்டால் நகரில் போக்குவரத்துப் பிரச்னை தொடர்ந்து கடுமையாகவே இருக்கும் என்று அமைச்சர் சொன்னார்.

## "தயவுப் பெரு நெறி"

(சுவாமி சரவணனந்தா)

(அருட்பிரகாச வள்ளலார் காட்டிய சமரச சுத்த சன்மார்க்க கொள்கை விளக்கம்)

### 2. ஆன்மா

ஆன்ம உண்மை அருள் அறிவினல்தான் அறிந்து, உளம் கொண்டு, அது காட்டும் அருள் ஒளி வழியே நடந்து, அருட் ஜோதிக் குறிக்கோளை அடையக் கூடியதாயிருக்கின்றது. அவ்வான்மாவின் முதல் நிலையும் முடிவு நிலையும், அருட் ஜோதி வெளியில்தான் உள்ளபடி அறியக்கூடியதாயிருக்கின்றது.

எங்கும் நிறை அருட் பெருஞ்ஜோதி, ஒவ்வொரு சிற்றணு நிலையினும் முழு நிறைவோடு இருந்து கொண்டுள்ளதாம். அப்படியுள்ள அணுக்களில் ஒரு குறிப்பிட்ட அணுவே, நம்மில் நாமாய் விளைவு கொண்டு, அதுவே நாமாய்ப் பெருகியுள்ளதைக் காண்கின்றோம். எங்கும் நிறை அருட் ஜோதிப் பரம் பொருளே, இந்த நம் சிற்றணு வடிவினின்று அறிந்து கொள்ளப் படுகின்றதாம். அருட் ஜோதியின், அகண்டமான பெரு நிலையும், அணுத்துவமான சிறு நிலையும் வேறுபட்ட இரு பொருள்ளல்ல; ஒன்றி இருவேறு நிலையேயாம். பெரு நிலை பரன் உண்மையைச் சிறு நிலை மனிதன் உளத்தே அறிந்து அனுபவத்தில் பெற்றுக் கொள்ளமுடிகின்றதாம். பரஞ்ஜோதி இறை நிலையே பரமான்மா எனவும் சிற்ஜோதி அணு மனித நிலையே ஜீவான்மா எனவும் கொள்ளப்படும்.

(தொடரும்)

# ரெயில்வே துறையில் திடீர் சோதனைகள்: ஊழல் கண்டுபிடிப்பு

புதுடெல்லி, ஜூலை 11— ரெயில்வே துறையில் பல இடங்களில் திடீர் சோதனைகள் நடத்தப்பட்டதனல் பெரும் ஊழல்களும், மோசடிகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

நாட்டின் மிகப் பெரிய அரசுத்துறை ஸ்தாபனமான ரெயில்வேக்களில் ஊழலைத் தவிர்க்க ரெயில்வே நடவடிக்கைகள் எடுத்துள்ளது. ரெயில்வேக்களின் கண்காப்பு ஸ்தாபனம் கடந்த ஆண்டில் இத்துறையில் சிறந்த முறையில் பணியாற்றியுள்ளது.

கடந்த ஆண்டு ரெயில்வே கண்காணிப்பு ஸ்தாபனம் பொதுமக்களுடன் தொடர்பு உள்ள இடங்களில் சுமார் 9 ஆயிரம் திடீர் சோதனைகள் நடத்தியது.

சுமார் 10 ஆயிரம் புகார்கள் அமைச்சகத்தில் பெறப்பட்டன. இவற்றில் சுமார் 4 ஆயிரம் புகார்கள் பற்றி விசாரணைகள் நடத்தப்பட்டன. 1974 டிசம்பர் மாதம் வரை கெஜட் பதிவு பெற்ற அதிகாரிகள் சம்பந்தப்பட்ட 274 வழக்குகள் மத்திய கண்காணிப்பு கமிஷனின் ஆலோசனைக்காக அனுப்பப்பட்டன, தற்போது அதிக தண்டனைக்குரிய சுமார் 90 வழக்குகளும் 27 குறைந்த தண்டனைக்குரிய வழக்குகளும், வழக்கு தொடரப் படுவதற்குரிய 8 வழக்குகளும்" கெஜட் பதிவு பெற்ற அதிகாரிகளுக்கு எதிராக உள்ளன.

நடைமுறைகளில் உள்ள குறைகளை நீக்குவது இந்த கண்காணிப்புத் திட்டத்தின் முக்கிய அம்சமாகும். மறைமுகமாக லாபகரமானதாகவும், சிக்கனமானதாகவும் இருந்தாலும்கூட ரெயில்வேக்களின் கண்காணிப்பு நடவடிக்கைகளால் 1974—75-ம் ஆண்டில் சுமார் 27 லட்சத்து 50 ஆயிரம் ரூபாய் வருவாய் நேர்முகமாக கிடைத்தது.

சம்பத்தில் ஆராய்ச்சி, வடிவமைப்பு, தர நிர்ணய ஸ்தாபனத்தின் முன்னள் துணை டைரக்டருக்கும் அவரது 2 இன்ஸ்பெக்டர்களுக்கும் பம்பாயின் விசேட நீதிபதியால் சுமார் 14 லட்சம் ரூபாய்க்கு மோசடி செய்ய முயன்றதற்காக தண்டனை வழங்கப்பட்டது. இவர்கள் வாகன்கள் உற்பத்தி செய்யும் நிறுவனம் ஒன்றுக்கு பொய்ச் சான்றிதழ்கள் வழங்கினர். இந்த வழக்கில் வேகமாகவும் திறம்படவும் துப்புத் துலக்கியதற்கான கௌரவம் அமைச்சகத்தின் கண்காணிப்பு டைரக்டரேட்டுக்கு உரியதாகும். இந்த இலாகா குற்றவாளிகளுக்கு எதிராக தவிர்க்க முடியாத வகையில் வழக்கு ஜோடிக்க மத்திய புலனய்வுத் துறைக்கு உதவியது.

வடக்கு ரெயில்வேயில் பிராந்திய கண்காணிப்பு நிறுவனம் சமீபத்தில் அந்த ரெயில்வேயின் கணக்குப் பிரிவில் காணப்பட்ட மோசடி ஒன்றை வெளிப்படுத்தியது. சுமார் ஒரு லட்சத்து 10 ஆயிரம் ரூபாய்க்கான செக்குகள், ஈடு செய்வதற்காக கொடுக்கப்பட்டிருந்தன. இது தொடர்பான பாங்கி கணக்குகளும் பொய்யானவையே. சில அதிகாரிகளும், தனியார் நிலக்கரிச் சுரங்கங்களின் சொந்தகாரர்களும் இணைந்து நிலக்கரிச் சுரங்கங்கள் தேசியமயமாக்கப் பட்டதற்குப் பிறகு அமைக்கப்பட்ட பணம் செலுத்துவதற்கான முறைகளைப் பயன்படுத்தி சுமார் 4 லட்சத்து 26 ஆயிரம் ரூபாய்க்கு மோடி செய்திருந்தனர் என்பதும் இதே ரெயில்வேயில் கண்டுபிடிக்கப்பட்டது.

சித்தரஞ்சன் தொழிற்சாலையில் கண்காணிப்பு டைரக்டரேட் நடத்திய சோதனைகளின் மூலம் சுமார் 2 லட்சம் ரூபாய் மதிப்புள்ள ரயில்வே எஃகு கல்கத்தா அங்காடிக்கு திருட்டுத்தனமாக திருப்பப் பட்டதும் இரும்புக் கலப்பல்லாத உலோகங்கள் 52 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள அதிவேக கருவிகள் போன்ற வகைகளில் மோசடி செய்திருப்பது தெரிய வந்துள்ளது. தென்கிழக்கு ரெயில்வேயில் சுமார் 5 லட்சம் ரூபாய் மதிப்புள்ள இரும்புக் கலப்பல்லாத உலோகம் மோசடி செய்யப்பட்டுள்ளது என்று சந்தேகிக்கப்படும் வழக்கு ஒன்றிலும் இப்போது துப்பு துலக்கப்பட்டு வருகிறது.

சிவில் பொறியியல் தொழிற்சாலையில் ரெயில்வே கண்காணிப்பு ஸ்தாபனம் நடத்திய சோதனைகளின் விளைவாக அதிகப்படியான விலை கொடுத்ததாலும் அதிகமான அளவுகள் காட்டப்பட்டதாலும் மத்திய ரெயில்வேயில் சுமார் 8 லட்சம் ரூபாய் நஷ்டம் ஏற்பட்டுள்ளது என்று தெரியவந்துள்ளது. நாக்பூர் டிவிஷனில் ஒரு கண்டிராக்டருக்கு 96 ஆயிரம் ரூபாய் அதிகம் கொடுத்திருப்பது தெரியவந்தது. கண்காணிப்பு ஸ்தாபனம் தலையிட்டதன் காரணமாக மேலும் 76 ஆயிரம் ரூபாய்க்கு நஷ்டம் ஏற்படவிருந்தது தவிர்க்கப்பட்டது. கிழக்கு ரெயில்வேயின் ஒரு உதவி எஞ்ஜினியர் ஒரு கண்டிராக்டருக்குமிகவும் அதிகமாக பணம் கொடுத்ததற்காக அதிகபட்ச தண்டனைக்குரிய வழக்கில் சம்பந்தப்பட்டிருக்கிறார். தென்கிழக்கு ரெயில்வேயில் ஒரு அதிகாரி கண்டிராக்டர் ஒருவருக்கு அளவுக்கு மீறி பொருள் கிடைக்க உதவியதற்காக அவருக்கு பலவந்தமாக சேவையிலிருந்து ஓய்வு கொடுக்கப்பட்டது.

கண்டிராக்டர்களுக்கும், அதிகாரிகளுக்குமிடையே தொடர்பு இருப்பது தெரிய வந்தால் உடனடியாக் கண்டிராக்டர்களுடன் வர்த்தகம் செய்யப்படுவது தாற்காலிகமாகவோ அல்லது நிரந்தரமாகவோ நிறுத்தப்படுகிறது. கண்காணிப்பு ஸ்தாபனம் தலையிட்டதன் விளைவாக வடகிழக்கு எல்லை ரெயில்வேயில் சிமெண்ட் வேறு இடத்துக்கு திருப்பப்பட்டதற்கான 2 லட்சத்து 80 ஆயிரம் ரூபாய் கொடுப்பது தவிர்க்கப்பட்டது. புதிய ஜல்பைகுரியில் 40 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள சரக்கு கொடுக்கப்படாமலே பணம் பெற்றது தெரியவந்தது. பம்பாய் சிட்டியில் இரண்டு அதிகாரிகள் வெள்ளைக் காகிதத்தில் டிக்கெட்டுகள் வழங்கி 40 ஆயிரம் ரூபாய் மோசடி செய்தனர். ரெயில்வே கண்காணிப்பு ஸ்தாபனம் நடத்திய சோதனைகளுக்குப் பிறகு இந்த வழக்கு மத்திய புலனய்வுத் துறையிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது.

# தபால்மூலம்பட்டபடிப்பு: பல்கலைக்கழக மான்ய கமிஷன் கட்டளை

புதுடெல்லி, ஜூலை 11— தபால் மூலம் கல்வி போதனை அளிக்கும் பல்கலைக் கழகங்கள் இது விஷயத்தில் சில வரைமுறைகளைப் பின்பற்றவேண்டும் என்று அவற்றுக்கு பல்கலைக் கழக மான்யக் கமிஷன் உத்தரவிட்டுள்ளது.

உயர்ந்த தரத்துக்குப் பெயர் பெற்ற போதனைத் துறைகளைக் கொண்ட பல்கலைக் கழகங்கள் தான தபால் மூலம் பாடபோதனை நடத்த வேண்டும் என்று மான்யக் கமிஷன் கூறியுள்ளது.

குறிப்பிட்ட ஒரு பாடம் சம்பந்தப்பட்ட தபால் மூலமான பாடங்களில் அடங்கிய விஷயங்களுக்கும், அவற்றின் தரத்துக்கும் பல்கலைக் கழகத்தில் உள்ள அப்பாடத்துக்குரிய துறையினர் பொறுப்பேற்க வேண்டும் என்றும் மானயக்கமிஷன் கூறியுள்ளது.

பணக் கஷ்டம் காரணமாகவும் வேறு பிரச்னைகளாலும் படிப்பைத் தொடர முடியாமல் போனவர்களுக்குப் பாடபோதனை அளிப்பதே தபால் மூலமான பாடபோதனைத் திட்டத்தின் நோக்கமாக இருக்கவேண்டும் என்று மான்யக் கமிஷன் கூறியுள்ளது.

தவிர, இத்திட்டம் தொலைதூரப்பகுதிகளில் உள்ளவர்களுக்கும், அக்கறையின்மையால் பாதியில்படிப்பைவிட்டுவிட்டு இப்போது மீண்டும் படிக்க விரும்புவோருக்கும் உதவுவதாக இருக்க வேண்டும். கல்லூரியில் அல்லது பல்கலைக் கழகத்தில் சேர விரும்பாதவர்களுக்கும், அப்படிச்சேருவதற்கு இடம் கிடைக்காமல் போனவர்களுக்கும் உதவுவதாக இருக்க வேண்டும்

பொதுவில் பட்டப்படிப்புக்கு கீழ்ப்பட்ட நிலையில் ஒரு மாநிலத்தில் ஒரு பல்கலைக் கழகம் மட்டுமே தபால்மூலம் பாடபோதனை நடத்தவேண்டும் என்றும் மான்யக்கமிஷன் கூறியுள்ளது.

### ஆனந்த மார்க்க தலைவர் மீது செஷன்ஸ் விசாரணை

பாட்னா, ஜூலை 1— விசேஷ மாஜிஸ்திரேட்குப்தா ஆனந்த மார்க்க கொலை வழக்கை செஷன்ஸ் கோர்ட் விசாரணைக்கு அனுப்பி வைத்தார். எதிரிகளில் ஒருவரான ஆனந்தமூர்த்தி என்ற பி ஆர் சர்க்கார் கோர்ட் உத்தரவுப்படி படுத்த படுக்கையில் கோர்ட்டுக்குத் தூக்கிக் கொண்டுவரப்பட்டார மற்ற 4 எதிரிகளும் ஆஜராகினர்.

# இளம் பெண்ணுக்குப் பருவ பூரிப்பை அளித்த ஆபரேஷன்

கல்கத்தா, ஜூலை 11— ஓராண்டுக்கு முன்னர் நடந்த ஆபரேஷனுக்குப் பிறகு 16 வயதான குமாரி தபதி இப்போது பூரண பருவப் பூரிப்புடன் திகழ்கிறாள்.

கருப்பையுடன் இணைந்திருக்கவேண்டிய 'ஓவரி' எனப்படும் கருமுட்டைகள் அடங்கிய உறுப்பு இல்லாமல் பிறந்தவள் தபதி. எனவே வயது கூடியும் அவள் வயதுக்கு வராதவளாகவே இருந்துவந்தாள்.

டாக்டர்கள் பரிசோதித்ததில், அவளுக்கு உள்ள கோளாறு தெரியவந்தது.

இந்த நிலையில் தனது உடலில் உள்ள இரு 'ஓவரி'களில் ஒன்றை தபதிக்கு தானமாக அளிக்க 35 வயதுப் பெண் முன்வந்தாள். இந்த ஆபரேஷன் கடந்த ஆண்டு ஜூலை 10-ந் தேதி நடந்தது. 35 வயது பெண்ணிடம் டாக்டர்கள் ஆபரேஷன் நடத்தி ஒரு ஓவரியை எடுத்து தபதிக்கு ஆபரேஷன்மூலம் அதைப் பொருத்தினர்.

ஓராண்டில் அவளுடைய உடல் வளர்ச்சியில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. முன்னர் தபதிக்கு மார்பகம் எதுவும் இல்லாமல் தட்டையான மார்பைப் பெற்றிருந்தாள். ஆபரேஷனுக்குப் பிறகு இப்போது அவளுக்கு எடுப்பாக மார்பக வளர்ச்சி ஏற்பட்டுள்ளது. பெண்ணுக்குரிய வனப்பும், வாளிப்பும் ஏற்பட்டுள்ளன. உயரம் அதிகரித்துள்ளது. எடையும் கூடியுள்ளது. இப்போது கவர்ச்சிக் கன்னியாகக் காட்சியளிக்கிறாள்.

இத்தகவலை அவளுடைய டாக்டர் கே. கே. கோசால் கூறினார்.

வேறு ஒருவரிடமிருந்து பெற்ற ஓவரியின் மூலம் பெண்மை எய்திய பெண் உலகிலேயே இவள் ஒருத்திதான் என்று அந்த டாக்டர் கூறினார்.

பொதுமக்களுடன்

# வங்கிகள் நல்லுறவு ராஜாராம் யோசனை

சென்னை, ஜூலை 11—நாட்டிலுள்ள ஏழை, எளிய மக்களுக்கும் வங்கிகளுக்கும் நல்லதொரு தொடர்பை ஏற்படுத்தி சமூக பணிகளில் திறமையுடன் செயல்பட வங்கி அதிகாரிகள் முன்வரவேண்டும் என்று தமிழக அமைச்சர் கே. ராஜாராம் கேட்டுக் கொண்டார்.

சென்னை சிண்டிகேட் வங்கியின் பிராந்திய வளர்ச்சி நிர்வாகி வி. நாராயணன் கேரளாவுக்கு மாற்றலாகிச் செல்வதை முன்னிட்டு சென்னையில் நேற்று முன்தினம் மாலை அவருக்கு பாராட்டு விழா நடைபெற்றது.

விழாவுக்கு தலைமைவகித்து அமைச்சர் ராஜாராம்மேலும் பேசியதாவது:—

வங்கிகள் தேசிய மயமாக்குவதற்கு முன்னாலேயே சிண்டிகேட் வங்கி நாட்டின் முன்னேற்றத்துக்கும், சமூகவளர்ச்சித் திட்டத்துக்கும் தொழில் வளர்ச்சிகளுக்கும் பொருளுதவி செய்து வந்தது.

சிறுசேமிப்புகளுக்கு ஆக்கம் தந்து தமிழக அரசின் பல வளர்ச்சித் திட்டங்களுக்கு ஒத்துழைப்புத் தந்திருக்கிறது. தமிழ்நாட்டில் நல்ல தொழில்களை ஆரம்பிக்கவும், தொழிலதிபர்களை உண்டாக்கவும் தேவையான கடனுதவி செய்து உற்சாகப்படுத்த வங்கிகள் முன் வரவேண்டும். நாட்டிலுள்ள ஏழை எளியவர்களுக்கும் வங்கிகளுக்கும நல்லதொரு தொடர்பை ஏற்படுத்தி சமூக பணிகளில் திறமையுடன் செயல்பட வங்கி அதிகாரிகள் முன்வர வேண்டும் என்றார் ராஜாராம். நாராயணன் சேவைகளை அவர் பாராட்டினார்.

அமைச்சர் மாதவன், தமிழக வீட்டு வசதி வாரியத் தலைவர் ராஜேந்திரன், தமிழ்வாணன், டாக்டர் விஜயலட்சுமி ஆகியோர் விழாவில் கலந்து கொண்டு மாற்றலாகிச் செல்லும் சிண்டிகேட் வங்கியின் பிராந்திய வளர்ச்சி நிர்வாகி வி. நாராயணனையும். புதிய நிர்வாகி கோபிநாத்தையும் பாராட்டிப் பேசினர்.

மாதவன் பேசும்போது தனி நபர் முன்னேற்றத்தைவிட நாட்டின் சமுதாய வளர்ச்சிக்கு முக்கியத்துவம் அளித்து வங்கிகள் பொருளுதவி செய்யவேண்டும் என்றார் உணவுப் பொருட்களை உற்பத்தி செய்யும் விவசாயிகளுக்கும் வேளாண்மை தொழிலுக்கும் முதலிடம் தந்து வங்கிகள் பொருளுதவி செய்ய வேண்டுவதன் அவசியத்தை அவர் வலியுறுத்தினார்.

வி. நாராயணின் சேவைகளைப் பாராட்டி விழாக்குழுவின் சார்பில் அமைச்சர் மாதவன் நாராயணனுக்கு பரிசு அளித்தார்.

இறுதியில் நாராயணன் பாராட்டுதலுக்கு நன்றி தெரிவித்தார். விழாவில் நூற்றுக்கும் மேற்பட்ட தொழிலதிபர்கள் கலந்து கொண்டனர்.

# சிறு தொழில் அதிபர்களுக்கு இந்திரா யோசனை

**புதுடெல்லி, ஜூலை 11—இறக்குமதி செய்துவரும் மூலப் பொருள்களை மட்டுமே நம்பி தொழில்களை ஆரம்பிக்காதீர்கள் என்று சிறு தொழில் அதிபர்களுக்கு பிரதமர் இந்திரா யோசனை கூறினார்.**

இந்திய சிறு தொழில் அதிபர்கள் சம்மேளனப் பிரதிநிதிகள் நேற்று பிரதமர் இந்திராவை சந்தித்தனர்.

இந்திராவின் 20 அம்ச பொருளாதாரத் திட்டங்களுக்கு அவர்கள் ஆதரவு தெரிவித்தனர்.

ஜப்பானிலும் வேறு சில நாடுகளிலும் செய்திருப்பது போல் சிறு தொழில்களையும் சிறு வணிகத்தையும் பாதுகாக்க தனிச் சட்டம் இயற்ற வேண்டும் என்று அவர்கள் பிரதமரை கேட்டுக் கொண்டனர்.

இந்த யோசனையைப் பரிசீலிப்பதாக இந்திரா உறுதி கூறினார்.

நாட்டின் மொத்த உற்பத்தியில் 40 சத விகிதம சிறு தொழில் பிரிவில் உற்பத்தியாவதாக இந்திரா தெரிவித்தார். ஆகையால் இப்பிரிவினருக்கு எல்லா விதமான ஊக்கத்தையும் அளிக்க அரசு முன்வரும் என்றும் இந்திரா கூறினார்.

சிறு தொழில் அதிபர்களில் சிலர் முறைகேடான நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார்கள் என்றும், இதனால் இந்த தொழிலுக்கே கெட்ட பெயர் ஏற்படுகிறது என்றும், இதை மற்றவர்கள் கண்காணிக்க வேண்டும் என்றும் இந்திரா கேட்டுக்கொண்டார்.

இறக்குமதி செய்யப்படும் மூலப் பொருள்களை நம்பியும் பற்றுக்குறை பொருள்களை நம்பியும் தொழில்களை ஆரம்பிக்கும் போக்கை கைவிட வேண்டும்.

இதனால் உற்பத்தி திறன் குறைவதோடு, சிலருக்கு மட்டும் பெருமளவு லாபம் கிடைக்கும் நிலை உண்டாகிறது.

பெரும்பாலானோர் இதனால் நஷ்டமடைகிறார்கள்,

ஆகையால் உள்நாட்டில் கிடைக்கும் பொருள்களை வைத்துக்கொண்டே தொழில்களை ஆரம்பிக்க முன் வர வேண்டும.

தொழில்களை ஆரம்பிக்க நடைமுறைகளை எளிதாக்கும்படி தொழில்துறை அமைச்சகத்தையும் பிரதமர் கேட்டுக் கொண்டார்.

# இட்லி எடையை எழுதிவைக்க கோரிக்கை

சென்னை, ஜூலை 11—ஓட்டல் பண்டங்களின் விலைகளை எல்லோருக்கும் நன்கு தெரியும்படி எழுதிவைப்பதுடன், அவற்றின் அளவையும் எழுதி வைக்கவேண்டும் என்று இந்தியப் பண்டம் பெறுவோர் சங்கத்தலைவர் எம். கே. சீனிவாசன் கோரிக்கை விடுத்துள்ளார்.

இதுகுறித்து நேற்று அவர் விடுத்துள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:

வியாபாரிகளின் சாம்ராஜ்யத்தை முறியடித்து பண்டம் பெறுவோரின் சாம்ராஜ்யத்தை உருவாக்க வேண்டும் என்கிற இலட்சியத்தை நோக்கி பிரதமர் இந்திரா காந்தி பயணம் புறப்பட்டிருக்கிறார். அதற்காக பண்டம் பெறுவோர் சார்பில் நான் அவருக்கு நன்றி தெரிவிக்க கடமைப் பட்டிருக்கிறேன்.

இருந்தாலும் ஓட்டல்களில் போர்டுபோடும் விஷயத்தை மத்திய அரசும் மாநில அரசும் இன்னும் கொஞ்சம் ஒழுங்காக அமுல் நடத்த முன்வர வேண்டும

## எங்கும் ஒரே விலை

சாப்பாட்டிற்கு மட்டும் போர்டில் விலை எழுதிவைத்து விட்டால் போதாது. தமிழ் நாட்டை பொறுத்தவரை எல்லா ஓட்டல்களிலும் சாப்பாட்டின விலையை எப்போதுமே போர்டில் எழுதி வைத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள். இருந்தாலும் ஒவ்வொரு ஓட்டலில் ஒவ்வொரு மாதிரியான விலையாக இருக்கிறது இதைக் கட்டுப்படுத்தி "எல்லா ஓட்டலிலும் ஒரே விலை" என்கிற நிலையை உண்டாக்க வேண்டும், இப்படிச் செய்கிறபோது ஓட்டல் காரர்கள் எந்த அளவுக்கு விலையைக் குறைக்க முன்வருகிறார்களோ அந்த அளவுக்கு பொருளின் (பண்டத்தின்) எடையைக் குறைத்து விடுகிறார்கள். ஆகவே விலையோடு எடையையும் நிர்ணயிக்க வேண்டும். இந்த நிர்ணயம் சாப்பாட்டுக்கு மட்டுமில்லாது.

ஓட்டலில் விற்பனையாகும் இட்லி - தோசை - வடை - பஜ்ஜி - காப்பி ஆகிய அனைத்து பண்டங்களுக்கும் ரெயில்வேக் காண்டீன்களில் உள்ளதைப்போலவே எடையையும் நிர்ணயிக்க வேண்டும்.

## இட்லியில் கவனம்

காரணம், போதிய வருவாய் இல்லாத ஏழை எளிய மக்கள் ஒரு நாளைக்கு ஒரு வேளைதான் சாப்பாடு சாப்பிடுகிறார்கள். மற்ற இரண்டு வேளையும் 'டிபன்' தான சாப்பிடுகிறார்கள். ஆகவே இட்லி தோசை, வடை, பஜ்ஜி போன்ற சிற்றுண்டிகள் விஷயத்தில் அரசினர் கவனம் செலுத்தவேண்டும. ஓட்டல் காரர்களின் கொள்ளையே சிற்றுண்டிகளில்தான் இருக்கிறது.

அரசாங்கம் ஓட்டல் பண்டங்களின் விலையோடு எடையையும் நிர்ணயிக்க முன் வரும் பட்சத்தில், பண்டம் பெறுவோரின் பிரதிநிதிகளையும் கலந்து முடிவெடுக்க வேண்டும்.

நிர்ணயிக்கப்பட்ட எடைக்குக் குறைவாக பண்டங்கள் விற்கப்பட்டால், ஓட்டல் காரர்கள்மீது தக்க நடவடிக்கை எடுக்கவேண்டும்.

மேற்கண்டவாறு அந்த அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

# சென்னையில் ரூ. 15 லட்சம் கடத்தல் பொருள் பறிமுதல்

சென்னை, ஜூலை 11—போன மாதம் ரூ. 1528751 மதிப்புள்ள கடத்தல்பொருள்களை சென்னை சுங்க இலாகா தடுப்பு பிரிவு அதிகாரிகள் கைப்பற்றி இருக்கிறார்கள்.

இவைகளில் ரூ 5,00,529 பெறுமான டெரிலின், நைலான் துணிகளும் இருக்கின்றன.

இது சம்பந்தமாக 7 பேர் கைது செய்யப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டிருக்கிறார்கள்.

அதே காலத்தில் கடத்தல் குற்றங்களுக்காக 10 பேருக்குத் தண்டனை வழங்கப் பட்டிருக்கிறது.

# மலிவு விலையில் பல்கலைக்கழக பாடநூல்கள்

புதுடெல்லி, ஜூலை 11—ஐந்தாவது திட்டத்தில் 2 கோடியே 90 லட்சம் ரூபாய் செலவில் 300 புத்தகங்களை வெளியிட தேசிய புத்தக டிரஸ்ட் திட்டமிட்டுள்ளது. தெரிந்தெடுக்கப்பட்ட சிறந்த இந்திய நூல்களை மலிவு விலையில் வெளியிடும். திட்டத்தின் கீழ் இவை வெளியிடப்படுகின்றன பல்கலைக் கழக மாணவர்களுக்குக் குறைந்த விலையில் கிடைப்பதற்காக இந்திய ஆசிரியர்களின் பாடநூல்களை வெளியிடுவதே இத்திட்டத்தின் நோக்கமாகும். இதுவரை இத்திட்டத்தின் கீழ் சுமார் 70 புத்தகங்கள் வைக்கப்பட்டுள்ளன. பல்வேறு துறைகளில் நிபுணர்களின் உதவியுடன் புத்தகங்கள் தெரிந்தெடுக்கப்படுகின்றன இத்திட்டம் 1970ல் துவக்கப் பட்டது.

இத்திட்டத்தின் கீழ் வெளியிடப்படும் புத்தகங்களை தனியார் நிறுவனங்கள் வெளியிடும் புத்தகங்களைமலிவு விலையில் விற்பதற்காக இந்த நிறுவனங்களுக்கு உதவி அளிக்கப்படும். புத்தகத்தின் விலை குறைவாக இருந்தால் ஆசிரியரின ராயல்டித் தொகையும் குறையும். எனவே ஆசிரியருக்கும் நிதி அளிக்கப்படுகிறது இதன் மூலம் குறைவு ஈடு செய்யப்படும்.

மந்திரியிடம் மத்திய அரசு

# ஊழியர் கோரிக்கை: "கிராக்கிப்படி அளவை குறைக்கக் கூடாது"

**புதுடெல்லி, ஜூலை 11—தங்களுக்குக் கிடைக்க வேண்டிய கிராக்கிப்படி அளவைக் குறைக்கக் கூடாது என்று மத்திய மந்திரிகளிடம் மத்திய அரசு ஊழியர் பிரதிநிதிகள் வலியுறுத்தினர்கள்.**

மத்திய அரசாங்க ஊழியர்களின் கிராக்கிப்படி பற்றி, மத்திய ஊழியர்களுக்கான கூட்டு ஆலோசனைக் குழு நேற்று பரிசீலித்தது. கூட்டத்துக்கு நிதி அமைச்சர் சி. சுப்ரமணியம் தலைமை வகித்தார்.

பாதுகாப்பு அமைச்சர் சுவரண்சிங்கும் விவாதத்தில் கலந்துகொண்டார். இன்னும் ஒரு வாரத்தில் மற்றொரு சுற்று பேச்சு நடத்த ஒப்புக் கொள்ளப்பட்டது.

தங்களுக்குக் கிடைக்க வேண்டிய கிராக்கிப்படியின் அளவைக் குறைத்து விடக் கூடாது என்று ஊழியர்கள் சார்பில் வலியுறுத்தப்பட்டது. ஆனால் கிராக்கிப்படி பாக்கியை எவ்வாறு பட்டுவாடா செய்தால் பொருளாதாரத்துக்குப் பாதகம் ஏற்படுவதைத் தவிர்க்க முடியும் என்பது குறித்து விவாதிக்க அவர்கள் ஒப்புக் கொண்டார்கள்.

(விலைவாசி குறியீட்டெண் 272 புள்ளியை தாண்டிய பிறகு, ஊழியர்களுக்கு சேர வேண்டிய 5 கிராக்கிப்படி உயர்வு தவணைகள் குறித்து நேற்று விவாதிக்கப்பட்டது).

## அவசர நிலை குறுக்கிடுமா?

தொழிலாளர்களின் அபிலாஷைகள், உரிமைகள் ஆகியவற்றில் தற்போதைய அவசர நிலை குறுக்கிடாது என்று இரு மந்திரிகளும் நேற்றைய பேச்சு வார்த்தையின்போது வலியுறுத்தியதாக சர்க்கார் வட்டாரங்கள் கூறின. சுமுகமான சூழ்நிலையில் பல விஷயங்கள் பற்றி கருத்துக்கள் பரிமாறிக்கொள்ளப்பட்டதாகவும் அவை கூறின.

சொந்த வீடுகளில் வசிக்கும் ரூ 750 வரை மாதச் சம்பளம் வாங்கும் அரசாங்க ஊழியர்களுக்கு, அவர்களுடைய வீடுகளுக்கு நகரசபை அதிகாரிகள் வரிக்காக போடும் மதிப்பு என்னவாயிருந்தபோதிலும், தொடர்ந்து வாடகைப்படி கிடைத்து வரும. இவ்வாறு சர்க்கார் முடிவு செய்துள்ளது.

நேற்று நடைபெற்ற கூட்டத்தின் போது, ஊழியர் பிரதிநிதிகளிடம் இந்த முடிவு தெரியப்படுத்தப்பட்டதாக சர்க்கார் அறிக்கையொன்று கூறுகிறது

இந்த ஊழியர்கள், வீட்டு வாடகை அலவன்ஸ் கோரிக்கையை அனுப்பும் போது, நகரசபை அதிகாரிகளின் மதிப்பீடு பற்றிய தஸ்தாவேஜை சமர்ப்பிக்க வேண்டியதில்லை.

# அரிசி கடத்தல்: 150 பேர் கைது

சென்னை ஜூலை 11—நேற்று முன்தினம் வில்லிவாக்கத்தில் பெங்களூர்-சென்னை எக்ஸ்பிரஸில் ரெயில்வே அதிகாரிகள் நடத்திய திடீர் சோதனையில் 400 மூட்டை அரிசி கைப்பற்றப்பட்டது. அரிசி எடுத்து வந்த சுமார் 150 பேர் கைது செய்யப்பட்டனர்.

டிக்கெட் பரிசோதகர்களும் ரெயில்வே பாதுகாப்பு படையினரும், அரசாங்கத்தினரும் ரெயில்வே போலீசாருமான சுமார் 100 பேர் இந்தச் சோதனை நடத்தினர்.

டிக்கெட் இல்லாமல் பயணம் செய்தவர்களும், அனுமதிக்கப்பட்ட அளவுக்குமேல் மூட்டை முடிச்சுகளுடன் வந்தவர்களும் பிடிக்கப்பட்டு அவர்களிடமிருந்து அபராதக் கட்டணத் தொகை வசூலிக்கப்பட்டது.

சென்னை சீனியர் டிவிஷனல் கமர்ஷியல் சூப்பிரண்டு மேற்பார்வையில் டிவிஷனல் பாதுகாப்பு அதிகாரி, உதவி போலீஸ சூப்பிரண்டு ஆகியோர் உதவியுடன் இந்தச் சோதனை நடத்தப்பட்டது.

# சிதம்பரத்தில் அழகிகள் கைது

சிதம்பரம் ஜூலை 11 சீர்காழி போலீஸ் சரகத்தைச் சேர்ந்த வைத்தீஸ்வரன் கோவில் வடக்கு வீதியில் இரவு நேரங்களில் போவோர் வருவோரை, ஆசைகாட்டி தவறான வழிக்கு அழைத்ததாக 4 இளம் அழகிகளை போலீசார் கைது செய்துள்ளனர்.

சாரதா (வயது 25), லட்சுமி (25), விஜயா என்கிற மாலா (21) பேபி (20) ஆகிய 4 அழகிகளும் மாயவரம் டி எஸ். பி. நடராசன் உத்தரவின் பேரில், சீர்காழி போலீஸ் இன்ஸ்பெக்டர் பக்தவத்சலம் உதவி சப்-இன்ஸ்பெக்டர் வரதராஜன் ஆகியோர் சோஷடியுடன் சென்று கைது செய்தனர். அந்த 4 அழகிகளும் ரிமாண்டில் வைக்கப்பட்டுள்ளனர்,

# பிரதமருடன் என். ஜி. கோரே சந்திப்பு

புதுடெல்லி, ஜூலை 11—சோஷலிஸ்டு தலைவர் என். ஜி. கோரே பிரதமர் இந்திரா காந்தியைச் சந்தித்து 25 நிமிஷ நேரம் பேசிக் கொண்டிருந்தார். பிறகு உடனே பம்பாய்க்குப் பயணமானார்.

# திருமயிலாடியில் அனாதை இல்லம் திறப்பு

சிதம்பரம், ஜூலை 11—சீர்காழி தாலுக்கா, திருமயிலாடி சுந்தரேசுவரர் தேவஸ்தானத்தின் சார்பில் அதன் நிர்வாக அதிகாரி சுவாமி வெங்கடாசலம், சீர்காழி தென்பாதியில் அனாதை மகளிர் இல்லம் ஒன்றை தொடங்கிவைத்தார், இவ்வில்லத்தில் 22 பெண்கள் தற்போது சேர்க்கப்பட்டுள்ளார்கள். இப்பெண் குழந்தைகள் 6 வயது முதல் 10 வயதுவரை உள்ளார்கள். இவர்களுக்கு உணவு, தங்குமிடம், படுக்கபாய், தலையணை, இரண்டு செட் பாவாடை, சட்டை ஆகியவைகளுடன் பெட்டியும் கொடுக்கப்பட்டுள்ளது. இவ்வில்லத்திற்கு ஆகும் செலவு அனைத்தையும் திருமயிலாடி சுந்தரேசுவரர் தேவஸ்தானம் ஏற்றுக்கொள்ளும் என நிர்வாக அதிகாரி வெங்கடாசலம் நிருபரிடம் தெரிவித்தார்.

# கார் விபத்தில் தி. மு. கழக எம். எல். ஏ.

திருச்சி, ஜூலை 11—கரூர் தாலூகாவில் உள்ள புல்யூர் சிமிண்ட் ஆலை அருகே ஒருலாரியுடன் ஒருகார் மோதிக்கொண்டதில் அந்தக் காரில் பிரயாணம செய்து கொண்டிருந்த திராவிட முன்னேற்றக் சழக எம். எல். ஏ.யான எல். கணேசனும, டிரைவர் உட்பட மற்றும் மூன்றுநபர்களும காயமடைந்தனர்.

தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஒரத்தநாடு தொகுதி எம.எல்.ஏ.யான கணேசனும மற்றவர்களும தஞ்சாவூரில் இருந்து கோயமுத்தூருக்குச் சென்றுகொண்டிருநதபோது இவ்விபத்து நடந்தது.

கணேசன் கரூர் ஆஸ்பத்திரிக்கு கொண்டு செல்லப்பட்டார். அங்கிருந்து பின்னர் தஞ்சாவூர் ஆஸ்பத்திரிக்கு கொண்டு போகப்பட்டார். காயங்கள் கடுமையானவையல்ல என்று கூறப்படுறது.

இச்சம்பவம் தொடர்பாக பசுபதிபாளையம் போலீசார் ஒரு வழக்குப் பதிவு செய்துள்ளனர்.

# மணலி ஆலையில் சமையல் வாயு உற்பத்தி பாதிப்பு

சென்னை, ஜூலை 11—சென்னை அருகே மணலியில் உள்ள பெட்ரோல் சுத்திகரிப்பு ஆலையில் "சமையல் வாயு" உற்பத்தி திடீரென்று குறைந்துவருகிறது. சுமார் 2 ஆயிரத்து 700 டன்கள் உற்பத்தி செய்யப்படும். சமையல் வாயு திடீரென்று 2100 டன்னாக விரைவில் குறைந்து வருகிறது

ஆலையில் ஒரு பகுதி யந்திர சாதனங்கள் பழுதடைந்ததே இந்த உற்பத்தி அதிக அளவில் பாதிக்கப்பட்டிருப்பதற்கு காரணமாகும்.

ஜூன் மாதத்தில் பட்டும் சுத்திகரிக்கப்படும் எண்ணெய் பொருட்கள் சுமார் 30 ஆயிரம் டன்கள் குறைந்து விட்டது.

ஒருமாதத்தில் சுமார் 2 லட்சத்து 40 ஆயிரம் டன் எண்ணெய் பொருட்கள் மணலி ஆலையில் சுத்திகரிப்பு செய்யப்பட்டுவருகிறது. இந்த அளவு 2 லட்சத்து 10 ஆயிரம் டன்னாகக் குறைந்துவிட்டது.

ஒவ்வொன்றும் சுமார் 75 ஆயிரம் டன் எண்ணெய் பொருட்களை ஏற்றிவந்த இரண்டு கப்பல்கள் சென்னைக்கு தாமதமாக வந்து சேர்ந்ததும் இந்த சமையல் வாயு உற்பத்தி குறைவுக்கு காரணம் என்று தெரியவருகிறது. இப்போது இந்த இரண்டு கப்பல்களிலிருந்தும் எண்ணெய் பொருட்கள் இறக்கப்பட்டு வருகின்றன.

பழுதடைந்த யந்திரங்களை சரிப்படுத்தும் வேலை தற்போது நடந்து வருகிறது. இந்த வேலை இன்னும் சுமார் ஒரு வாரத்தில் முடிவடைந்துவிடும்.

## இன்றைய சினிமா

சென்னை:

ராம்: யாருக்கும் வெட்கமில்லை
நியூ எல்பின்ஸ்டன்
சலனம்
மேற்கு மாம்பலம் நேஷனல்;
பாபி
சராஸ்; விக்கிரமாதித்தன்
குரோம்பேட்டை
வெற்றி:
யாதோங்கி பாராத்
பல்லாவரம்
லட்சுமி: நல்ல நேரம்
தாம்பரம்
சித்ரா மயங்குகிறாள் ஒரு மாது
எம். ஆர். தியேட்டர்:
சவாலே சமாளி
நேஷனல்
நாளை நமதே
சித்ரா: ரகசிய போலீஸ் 115
கொளத்தூர்
ஸ்ரீ குமரன்
கஸ்தூரிவிஜயம்
திருக்கழுக்குன்றம்
புவனேஸ்வரி
சிரித்து வாழவேண்டும்

பர்மாவில் பூகம்பம்

# 80 சதவிகித கோவில்கள் சரிந்தன

பாங்காக் ஜூலை 11—செவ்வாய்க்கிழமையன்று பர்மாவின் பல பகுதிகளில் பூகம்பம் ஏற்பட்டது. ரங்கூன் மாண்டலே பாகன் நையாங்யூ ஆகிய இடங்களில் உள்ள கோவில்களில் 80 சதவிகிதம் அழிந்து விட்டன.

ரங்கூனுக்கு வடக்கே 480. கிலோ மீட்டர் (300 மைல்) தூரத்தில் இந்த பூகம்பத்தின் மையம் இருந்ததாக நிலநடுக்க ஆராய்ச்சி நிலையம் கூறியது.

அரசு பஸ் அதிகாரி அறிவிப்பு:

# விபத்து இல்லாமல் ஓட்டும் பஸ் டிரைவருக்கு சிறப்புச் சலுகைகள்

**சென்னை, ஜூலை 11—விபத்து இல்லாமல் பஸ் ஓட்டும் டிரைவர்களுக்குச் சிறப்புச் சலுகைகள் வழங்கப்படும் என்று பல்லவன் போககுவரத்துக் கழக நிர்வாக இயக்குநர் ஆர். தில்லைநாயகம் அறிவித்தார்,**

சாலைகளில் பஸ் விபத்துக்களைக் குறைக்கவும், விபத்துக்களின்றி பஸ்களை நிதானமாக ஓட்டும் டிரைவர்களை ஊக்கப்படுத்தவும் இந்த திட்டம் கொண்டுவரப்படுகிறது என்றும் தில்லைநாயகம் குறிப்பிட்டார்.

விபத்துகளின்றி பஸ்களை ஓட்டும் டிரைவர்களுக்கு இனி ஆண்டுதோறும் விசேஷ நற்சான்றிதழ்கள் வழங்கபபடும். ஊக்கபோனஸ் பதவி உயர்வு போன்றவை அளிக்கப்படும் போது. இந்த நற்சான்றிதழ்கள் பெற்றவர்களுக்கு முன்னுரிமை அளிக்கப்படும்.

பஸ் டிரைவர்களுக்கான தேர்வு இதுவரை 'வேலை வாய்ப்புத் துறை'யின் மூலமே நடந்துவந்தது. ஆனால், இனி பயிற்சி பெற்ற திறமையான டிரைவர்களை நிர்வாகமே தேர்ந்தெடுக்கும்.

## மனோநிலை பரிசோதனை

தேர்ந்தெடுக்கப்படும் டிரைவர்கள் இனி உடற்கூறு பரிசோதனை மட்டுமின்றி 'மனோநிலை பரிசோதனைக்கும் உட்படவேண்டும்.

இந்திய சாலைப் போக்குவரத்தினால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த 'சாலை விபத்துக்கள்' பற்றிய கருத்தரங்கில் கலந்துகொண்டு தில்லை நாயகம் உரையாற்றினார். சாலைகளில் பஸ்களினால் ஏற்படும் விபத்துக்கள் தற்பொழுது வெகுவாக குறைக்கப்பட்டு விட்டதாகக் கூறினார்.

அன்றாடம் நகரில் ஏற்படும் விபத்துக்களில் 3.5 சத விகிதத்திற்கு பல்லவன் பஸ்கள் சம்பந்தப்பட்டிருந்தாலும் பெரும்பாலான விபத்துக்கள் பொதுமக்களின் கவனக்குறைவினாலேயே ஏற்படுவதாகக் கூறினார்.

1974-ல் 10 லட்சம் கிலோ மீட்டருக்கு 30 விபத்துக்கள் வீதம் என்றிருந்தது தற்போது 24-க்கும் குறைந்து விட்டது.

இந்த சத விகிதத்தை மேலும் குறைக்கவும், டிரைவர்களுக்கு நல்லதிறமையான பயிற்சி அளிக்கவும் விசேஷ வகுப்புகள் நடத்தப்பட இருப்பதாகவும் தில்லைநாயகம் தெரிவித்தார்.

## ஷெனாய் பேச்சு

கருத்தரங்கில் பங்கு கொண்டு சிறப்புரையாற்றிய லஞ்ச ஒழிப்புத்துறை டைரக்டர் கே. ஆர். ஷெனாய் சாலை விபத்துக்கள் ஏற்படும் விதங்களையும் அதை தடுப்பதற்கான வழி முறைகளையும் விளக்கினார்.

இந்த ஆண்டில் மரணம் விளைவிக்கக் கூடிய விதத்தில் 250 விபத்துக்கள் நேர்ந்துள்ளதென்றும், அவற்றுள் 92 விபத்துக்களில் 'பல்லவன் பஸ்கள்' சம்பந்தப்பட்டிருப்பதாகவும் ஷெனாய் கூறினார். பஸ்களினால் ஏற்படும் மரணங்கள் பெருமபாலும் படிக்கட்டுப் பயணங்களாலேயே உண்டாகின்றன என்றும் படிக்கட்டுப் பயணத்தை அடியோடு தவிர்க்கவேண்டும என்றும் பொது மக்களைக் கேட்டுக்கொண்டார்.

பஸ் படிக்கட்டிலிருந்து தவறி விழுந்தால், பின் சக்கரத்தில் சிக்காமல் ஓரமாக தள்ளிவிடும் படியான சாதனம் ஒன்றை புதிதாக கண்டுபிடிக்குமாறு சாலை போக்குவரத்து எஞ்சினீயர்களைக் கேட்டுக்கொண்டார்.

தானாக மூடிக் கொள்ளும் கதவுகளைக் கொண்ட பஸ்கள் படிப்படியாக நகரத்தில் கொண்டுவரப்படும் என்றும் ஷெனாய் தெரிவித்தார்.

# 15 சதவிகித விலைகுறைப்பு: புதுவை ஓட்டல் உரிமையாளர்கள் முடிவு

சென்னை ஜூலை 11—இன்று (வெள்ளிக்கிழமை) முதல், ஓட்டல் பண்டங்களின் விலையை 15 சதவிகிதம் குறைத்து விற்பனை செய்ய புதுவையிலுள்ள ஓட்டல் சொந்தக்காரர்கள் முடிவு செய்துள்ளனர்.

புதுவை மாவட்ட கலெக்டர் பி. சி. ஏ. ரங்கதுரை கூட்டிய ஒரு கூட்டத்தில் ஓட்டல் சொந்தக்காரர்கள் இம் முடிவை எடுத்தனர்.

இந்த முடிவை எல்லா ஓட்டல்களும் மனப்பூர்வமாக அமுல் நடத்தும் என்று ஓட்டல் சொந்தக்காரர்கள் சங்கத் தலைவர் பரமேசுவரன் நிருபர்களிடம் தெரிவித்தார்.



நுரையினால் ஆன திடீர் வீடு கட்டப்பட்ட பிறகு அலுமினியத் தகடுகளால் ஆன அச்சு "கிரேன்" மூலம் மேலே தூக்கப்படுகிறது. படத்தில் ஜன்னலுடன்கூடிய திடீர் வீடு காட்சியளிக்கிறது.

# திடீர் வீடுகளைக் கட்டும் "பறக்கும் தொழிற்சாலை"

**ஓரிடத்தில் பூகம்பம்; தகவல் கிடைத்ததும் "பறக்கும் தொழிற்சாலை" எனப்படும் விமானம் விரைகிறது. அது மணிக்கு 6 வீடுகள் வீதம் திடீர் வீடுகளைக் கட்டுகிறது. அந்த வீடுகள் அனைத்தும் கெட்டியான நுரையினால் ஆனவை.**

ஒரு நாளைக்கு 150 வீடுகள் வீதம் கட்டி பூகம்பத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு விரைவில் புகலிடம் அளித்து விடமுடியும்.

பிரிட்டனில் உள்ள "ஆக்ஸ்பாம்" எனப்படும் உலகப் பிரசித்தி பெற்ற நிவாரண அமைப்பு திடீர் வீடுகளைக் கட்டுவதற்கான பறக்கும் தொழிற்சாலையை உருவாக்கியுள்ளது.

பூகம்பம், வெள்ளம்போன்ற இயற்கை விபரீதம் ஏற்படும்போது ஏராளமான மக்கள் வீடிழக்கும்போது அலறி பேரளவில் அகதிகள் ஓடிவரும் போது வழக்கமான கட்டுமானப் பொருட்களைக்கட்டிக் கொண்டு இருக்கமுடியாது. அதற்கு நீண்டகாலம் பிடிக்கும் பாதிக்கப்பட்ட மக்கள் அதுவரை திறந்தவெளியில் வாழமுடியாது. உறுதியான துணியால் ஆன கூடாரங்களை அமைக்கலாம். ஆனால் கூடாரம் குளிரிலிருந்து பாதுகாப்பு அளிக்காது.

"ஆக்ஸ்பாம்" அமைப்பின் நிபுணர்கள் இவற்றையெல்லாம் ஆராய்ந்து நினைத்த இடத்தில் மிகவிரைவாக திடீர் வீடுகளைக் கட்டுவதற்கான ஒரு முறையைக் கண்டு பிடித்துள்ளனர்.

இவர்கள் கண்டுபிடித்துள்ள முறையின் மூலம் வீடுமட்டும் அல்ல, படகுகள், நீர்த் தொட்டி, சேமிப்புப் பெட்டி போன்ற எவ்வளவோ பொருட்களை உடனுக்குடன் தயாரித்து பாதிக்கப்பட்ட மக்களுக்கு அளிக்கமுடியும்.

## நுரை வீடு

"ஆக்ஸ்பாம்" நிபுணர்கள் எந்தப்பொருளைப் பயன்படுத்தி இவ்விதம் வீடுகளைக் கட்டுகின்றனர்?

அது "பாலியூரிதேன்" நுரையாகும். அது ஆரம்பத்தில் குழம்பு வடிவத்தில் இருக்கும். அந்த நுரையை நமக்குவேண்டிய வடிவிலான அச்சு ஒன்றை வைத்து அதன் மீது பீச்சினால் குழம்பு வடிவத்தில் உள்ள பொருள் இறுகிவிடுகிறது. வேண்டிய வடிவம் கிடைத்து விடுகிறது.

இப்படித்தான் அவர்கள் திடீர் வீட்டைகட்டுகின்றனர். உண்மையில் அவர்கள் வீடுகளைக் கட்டுவதாகச் சொல்ல முடியாது. வீடுகளை வார்த்து விடுகின்றனர்.

"ஆக்ஸ்பாம்" நிபுணர்கள் இவ்விதம் வீடுகளைக்கட்டுவதற்காக உருவாக்கியுள்ள தொழிற்சாலை 3 மீட்டர் உயரம் 2 மீட்டர் அகலம் 2 மீட்டர் நீளம் கொண்ட ஒரு பெட்டி வடிவத்தில் உள்ளது. அதில் நுரை வீடுகளை உருவாக்குவதற்கான குழம்பு தவிர மற்றபடி வீடுகளைக் கட்டுவதற்கான எல்லா சாதனங்களும் அடங்கியுள்ளன.

ஒருபெட்டியை ஒரு விமானத்தில் ஏற்றி எடுத்துச் செல்லலாம். விமானத்தில் மீதியுள்ள இடத்தில் "பாலியூரிதேன்" குழம்பு அடங்கிய பெரிய பீப்பாய்களை ஏற்றிக்கொள்ளலாம்.

இந்த விமானம் வீடுகளைக் கட்டவேண்டிய இடத்துக்கு அருகாமையில் உள்ள விமான நிலையத்தில் போய் இறங்குகிறது. வீடுகட்டும் திடீர் சாதனப் பெட்டி ஒரு லாரியுடன் இணைக்கப்பட்டு இழுத்துச் செல்லப்படுகிறது. பீப்பாய்களும் எடுத்துச்செல்லப் படுகின்றன.

## வீடுகட்ட அச்சு

குறிப்பிட்ட இடத்துக்குப் போனதும் வேலை ஆரம்பமாகிறது. வீடுகட்டும் நிபுணர்கள் சுறுசுறுப்பாக செயல்படுகின்றனர். முதலில் அவர்கள் அலுமினியத் தகடுகளைப் பயன்படுத்தி சிறிய ஓர் அறையைக் கொண்ட வீட்டின் வடிவத்தை உருவாக்கிக் கொள்கின்றனர். பிறகு அதற்குள் நுரைக்கும் பீப்பாயிலிருந்து "ஸ்பிரே" கருவி மூலம் அலுமினியச் சுவர்களின் உட்புறத்தில் பாலியூரிதேன் குழம்பைப் பீச்சுகின்றனர்.

அக்குழம்புடன் அவர்கள் ரசாயனப் பொருட்களைக் கலந்து பீச்சுவதால் அது அலுமினிய சுவர்களில் படிந்ததும் காற்று பட்டு 50 மடங்கு விரிவடைந்து இறுகி விடுகிறது.

உடனே அலுமினியத் தகடுகளால் ஆன "அச்சு" மேல் வழியாக மேலே தூக்கப்பட்டு விடுகிறது. இப்போது வீடு தயார். அதே அச்சை வேறு ஒரு இடத்தில் வைத்து மற்றொரு வீட்டை 'வார்த்து' எடுக்கிறார்கள்.

## மணிக்கு 6 வீடு

இப்படியாக மணிக்கு 6 வீடு கட்டலாம். ஒரு நாளில் சுமார் 150 வீடுகளை கட்டி விடலாம்.

இப்படி உருவாக்கப்படும் வீட்டில் ஜன்னல் கதவு ஆகியவற்றுக்கு இடம் விடப்படுகிறது. வீட்டின் உட்புறத்தில் சுவர்களுக்கு இடையிலான தூரம் சுமார் 9 அடி. இந்த வீடு உறுதியாக நிற்கக் கூடியதாகும்.

வெளியே கடும்குளிர் அடித்தாலும் சரி, கடும்வெயில் அடித்தாலும் சரி உள்ளே தெரியாது.

இந்த வீடுகளை உருவாக்க பெரிய ஆள்படை தேவையில்லை. 5 அல்லது 6 பேர் இருந்தால் போதும். அடுத்தடுத்து வீடுகளைக் கட்டிச் செல்லலாம்.

"பாலியூரிதேன்" குழம்பு நிறைய இடத்தை அடைத்துக் கொள்ளாத பொருளாகும். ரசாயனங்களின் சேர்க்கையின் பிறகுகாற்று பட்டதும்தான் அது விரிவடைகிறது.

அக்குழம்பின் இத்தன்மையால்தான் இத்திட்டம் சாத்தியமாகியுள்ளது.

நமக்கு வேண்டிய பொருட்களின் வடிவில் அச்சு தயாரித்து இக் குழம்பைப் பீச்சுவதன் மூலம் அவசரத் தேவைக்கான படகுகள், நீர்த்தொட்டிகள், சேமிப்புப் பெட்டிகள் முதலிய பொருட்களைத் தயாரிக்க முடியும். "ஆக்ஸ்பாம்" அமைப்பு தேவைப்பட்ட இடங்களுக்கு உடனடியாக அனுப்புவதற்கென உலகின் ஆங்காங்கு முக்கிய இடங்களில் இந்த "பறக்கும் தொழிற்சாலை" களின் யூனிட்டுகளை அமைக்க திட்டமிட்டுள்ளது.

இயற்கை விபரீதம் ஏற்படும் நேரங்களில் தான் இந்த யூனிட்டுகள் செயல்பட வேண்டுமென்பதில்லை. ஆண்டு பூராவிலும் வீடுகளை உருவாக்கி வீடற்றவர்களைக் குடியேற்ற முடியும்.

இப்போதைக்கு ஆக்ஸ்பாம் தனது முதலாவது குழுவுக்குப் பூரணமாக பயிற்சி அளித்து பிரிட்டனில் உள்ள வீடுகளைக் கட்டுவதற்கு ஏற்பாடு செய்து வருகிறது.

# ரேஷன் கார்டு கிடைக்க போலீஸ் கமிஷனர் உதவி

சென்னை, ஜூலை 11 புதிய ரேஷன் கார்டு கிடைக்காததினால் அவதிக்கு ஆளான போலீஸ்காரர்களின் மனைவியர்கள்நேற்று முன் தினம் நகர போலீஸ் அலுவலகத்திற்குப் படைஎடுத்துச் சென்று கமிஷனர்ஷெனாயிடம்முறையிட்டுக் கொண்டார்கள்.

அவர்களுடைய முறையீட்டை அனுதாபத்துடன் கேட்டுக் கொண்ட கமிஷனர் அவர்களுக்கு ரேஷன் கார்டு கிடைக்கவும், ரேஷன் கார்டு கிடைத்தவர்களில் பலருக்கு கார்டுகளில் காணப்பட்ட தவறுகள் காரணமாக தோன்றிய இடர்ப்பாடுகளைப் போக்கவும் உணவுத்துறை அதிகாரிகளிடம் தொடர்பு கொண்டு ஆவன செய்தார்.

தன்னைக் கண்டு முறையிட வந்த கோஷ்டியைச் சேர்ந்த சில பிரதிநிதிகளை உணவுத் துறை அதிகாரிகளிடம் அனுப்பிவைத்து வேண்டிய நடவடிக்கை எடுக்கும்படி அந்த அதிகாரிகளிடம் கேட்டுக்கொண்டதாகவும் நிருபர்களிடம் ஷெனாய் கூறினார்.

புதுரேஷன் கார்டு கிடைக்காமல் அவதிப்பட்டு கமிஷனரைக் காணவந்த போலீஸ்காரர்களின் மனைவியர்கள் 'கொச்சின் ஹவுஸ்' போலீஸ் குடியிருப்பைச் சேர்ந்தவர்கள். இந்தக் குடியிருப்பில் சுமார் 25பக்கு மேற்பட்ட குடும்பங்களுக்கு கார்டு கிடைக்கவில்லை என்று கமிஷனரிடம் தெரிவிக்கப்பட்டது.

# மோட்டார் தொழிற்சங்க நிர்வாகிகள்

தாம்பரம் ஜூலை 11— ஸ்டாண்டர்டு மோட்டார்ஸ் தொழிற்சாலை தொழிற்சங்கத்தின் நடைமுறைத் தலைவராக டி. வைத்தியலிங்கம் செயலாளராக எச். டி. டபுள்யூ. ஜார்ஜும் கூட்டுச் செயலாளராக எஸ். ஜி. சுப்பிரமணியமும் உதவி தலைவர்களாக பீட்டரும் எம். சிவசுப்பிரமணியமும், பொருளாளராக துக்காராமும் மற்றும் செயற்குழு உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

சபாநாயகர் தீர்ப்பு

# சட்டசபைக்கு கறுப்பு பட்டை அணிந்து வருவது சரியா?

**ஆமதாபத், ஜூலை 11—எம். எல். ஏ.க்கள் கறுப்பு பட்டைகளை அணிந்துகொண்டு சட்டசபைக்கு வருவதனால் சட்டசபையின் ஒழுங்கு முறைக்கு எந்த குந்தகமும் ஏற்பட்டுவிடாது என்று குஜராத் சட்டசபை சபாநாயகர் குந்தன்லால் தாலோக்கியா நேற்று சட்டசபையில் அறிவித்தார்.**

ஜனதா முன்னணியைச் சேர்ந்த சட்டசபை அங்கத்தினர்கள் சிலர் கறுப்பு பட்டைகளை அணிந்துகொண்டு சட்டசபைக்கு வந்திருந்ததை குறிப்பிட்டு புதுக் காங்கிரஸ் உறுப்பினர் பிரதாப்ஷா எழுப்பிய கேள்வி ஒன்றுக்கு பதிலளிக்கையில் சபாநாயகர் மேற்கண்ட கருத்தை வெளியிட்டார்.

கறுப்பு பட்டை அணிந்து கொள்வது ஒரு ஆர்ப்பாட்டத்தின் அடையாளம என்றும் இப்படிப்பட்ட ஆர்ப்பாட்டங்கள் சட்டசபையில் நடைபெறுவது சட்டசபை விதிகளுக்குமுரண்பாடானது என்றும், ஆகவே கறுப்பு பட்டைகளை அணிந்து கொண்டு சட்ட சபைக்கு வருவதை அனுமதிக்கக் கூடாது என்றும் பிரதாப்ஷா கோரினார்.

இதற்கு பதிலளிக்கையில் சபாநாயகர் கூறியதாவது:

ஆர்ப்பாட்டங்கள் எந்த வகையாக இருந்தாலும் அவைகளை சட்டசபையில் நடைபெற அனுமதிப்பதற்கில்லை. ஆயினும் கறுப்பு பட்டைகள் அணிவது தங்களுடைய உடை அலங்காரத்தின் ஒரு பகுதியாகும். சட்டசபை உறுப்பினர்களின் உடையலங்காரத்தைப் பற்றி சட்டசபை விதிகள் எதுவும் குறிப்பிட்டுக் கூறவில்லை. உறுப்பினர்கள் கறுப்புப் பட்டை அணிந்துகொண்டு சட்டசபைக்கு வருவதைத் தடுக்கமுடியாது என்று சபாநாயகர் தீர்ப்பளித்தார்.

ஆயினும் இது பற்றி உறுப்பினர்கள்குறிப்பிட்ட ஆதாரங்களுடன் கொண்டு வந்தால் தன் தீர்மானத்தை மறுபரிசீலனை செய்வதாகவும் அவர் உறுதியளித்தார்.

சபாநாயகர் குந்தன்லால் தாலோக்கியாவின் தீர்ப்பை முன்னாள் சபாநாயகர் ராகவ் ஜீலூவா (புது காங்கிரஸ்) வரவேற்றார்.

# ரூ. 48 கோடி செலவில் மீன்வள திட்டம்: உலக பாங்க் உதவி

புதுடெல்லி ஜூலை 11— நாட்டில் ஒருங்கிணைந்த மீன்வள திட்டங்களை அமைப்பது பற்றி ஆய்வுகள் நடத்த உலக பாங்கின் ஆயத்தப் பணிக்குழு ஒன்று இந்தியா வந்திருக்கிறது. மீன்பிடிப்புத் துறைகள் அமைப்பது, இயந்திர படகுகள் பெறுவது, குளிர்பதன ஆலைகள் அமைப்பது, விற்பனைசந்தை முதலியவை இதில் அடங்கும்.

1974—ல் இந்தியாவில் மீன்வள நிலைப்பற்றி ஆராய்ந்து இங்கு மீன் பண்ணை வளர்ச்சிக்கு உலக பாங்கு நிதியுதவி அளிப்பது பற்றி ஆலோசனை கூறவென வந்திருந்த உலக பாங்கு குழுவின் பணியைத் தொடர்ந்து, தற்போதைய ஆய்வு நடைபெறுகிறது.

மீன் பண்ணை வளர்ச்சித் திட்டங்களுக்கு ஏறக்குறைய 48 கோடி ரூபாய் செலவாகும் என எதிர்பார்க்கப்படுகிறது. உலக பாங்கு இதில் 50 முதல் 60 சதவீதம் வரை நமக்கு உதவிபுரிக்கிறது. இந்திய மீன் பண்ணைத் திட்டங்களுக்கு உலகபாங்கு உதவுவது இதுவே முதல் தடவையாகும்.

# தி. மு. க. பிரமுகர் பேச்சு

சென்னை, ஜூலை 11—இன்றைய அரசியல் சூழ்நிலையில் எதிர்க்கட்சிகளின் போக்கை தமிழக மக்கள் அடையாளங் கண்டுகொண்டு விட்டனர் என்று பரங்கிமலை கன்டோன்மெண்ட போர்டு துணைத் தலைவரும் திமுக பிரமுகருமான எஸ். வேணுகோபால் கூறினார்.

சென்னையை அடுத்த பல்லாவரத்தில் நேற்று மாலை திமுக. பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. கூட்டத்துக்குத் தலைமை வகித்துப் பேசிய எஸ். வேணுகோபால் தமிழக மக்களுக்கு பெரும்பாலும் ஏழை எளியவர்களுக்கு திமுக. அரசு செய்துவரும் பணிகளை விவரித்தார்.

இந்திய பிரதமர் இந்திரா காந்தியின் 20 அம்ச திட்டங்களில் பெரும்பாலானவற்றை தமிழக முதல்வர் கருணாநிதி செயல்படுத்தி வருவதை அவர் விளக்கினார்.

# மின்சார உற்பத்தி: முதல்வர்களுக்கு மத்திய மந்திரி கடிதம்

புதுடெல்லி, ஜூலை 11— மின்சார இலாகா மந்திரிகளின் கடந்த இரு மகாநாடுகளிலும்மேற்கொள்ளப்பட்ட முடிவுகளை அமல்படுத்தி மிகக் குறுகிய காலத்தில் அனல் மின்சார நிலையங்கள் மணிக்கு 6000 கிலோவாட் மின்சாரம் உற்பத்தி செய்ய வழிகோலுமாறு முதல் மந்திரிகளை மத்திய மின்சாரத் துறை மந்திரி கே. சி. பந்த் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

பல்வேறு மாநில முதல் மந்திரிகளுக்கும் அவர் இது குறித்து ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்.

இந்த ஆண்டில் மின்சார உற்பத்தியை 26000 மில்லியன் வாட் கூடுதலாக்கவேண்டும் என்ற குறிக்கோளை மின்சார இலாகா மந்திரிகள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆகையால் ஒவ்வொரு திட்டமும் நிறைவேறுமாறு முதல்வர்கள் நெருங்கி கண்காணித்துக்கொள்ள வேண்டும்என்று அவர் தமது கடிதத்தில் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

# வறட்சிப் பணிக்கு மேலும் ரூ.4 கோடி: மந்திரி தகவல்

திருச்சி, ஜூலை 11—வறட்சி நிவாரணத்துக்கு தமிழ்நாடு அரசு மேலும் ரூ. 4 கோடி ஒதுக்கியுள்ளது என்று ரெவின்யூ அமைச்சர் தர்மலிங்கம் நேற்று நிருபர்களிடம் கூறினார்.

சமீபத்தில் சென்னையில் நடந்த கலெக்டர்கள் மகாநாட்டில், இவர்கள் சமர்ப்பித்த அறிக்கைகளின்பேரில் இத்தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது என்றார். இந்த ரூ. 4 கோடியில் ராமநாதபுரம், மதுரை, புதுக்கோட்டை மாவட்டங்களுக்கு ரூ. 2 கோடி செலவிடப்படும் என்றும், திருச்சி மாவட்டத்திற்கு மேலும் ரூ. 32 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்றும் மந்திரி தெரிவித்தார். இதுவரை திருச்சி மாவட்டத்திற்கு ரூ. 172 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

பல மாவட்டங்களில் நடந்துள்ள வறட்சி நிவாரண வேலை குறித்து அமைச்சர் திருப்தி தெரிவித்தார்.

# இந்தியாவுக்கு ரூ. 84 கோடி உலக பாங்க் உதவி

புதுடெல்லி, ஜூலை 11— உலக பாங்குக் குழுக்கள் 1975 ஜூன் மாதத்துடன் முடிவடைந்த நிதி ஆண்டில் இந்தியாவுக்கு 84 கோடி டாலர், வங்காள தேசத்துக்கு 15 கோடி டாலர் ஸ்ரீலங்காவுக்கு 2.85 கோடி டாலர் உதவி வழங்கியுள்ளன.

உலக பாங்க் வெளியிட்டுள்ள அறிக்கையில் இந்தத் தகவல் அடங்கியுள்ளது. பிரஸ்தாப ஆண்டில் இந்தியாவுக்கும், வங்காள தேசத்துக்கும் மிக அதிக அளவு உதவி கிடைத்துள்ளது. "உலகம் பூராவும் காணப்படும் பணவீக்க நிலைமை, பெட்ரோல் விலை உயர்வுகளால் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ள இந்தியா, வங்காள தேசம், ஸ்ரீலங்கா ஆகிய மூன்று நாடுகளும் மொத்தம் 101.85 கோடி டாலர் பெற்றன என்று அறிக்கை தெரிவிக்கிறது.

இந்தியாவுக்கு அளிக்கப்பட்ட 84 கோடி டாலர் (ரூ 630 கோடி) உதவியில் பெரும்பகுதி அதாவது 63.11 கோடி டாலர் சர்வதேச அபிவிருத்திச் சங்கத்திடமிருந்து கிடைத்ததாகும். இதில் 50 கோடி டாலர் (ரூ. 375 கோடி) தொழிலுக்காகும், பாக்கி கிராமப்புற அபிவிருத்திக்காகும்.

# இந்தியப் பிரதமருக்கு பின்லாந்து அமைதிகுழு முழு ஆதரவு

புதுடெல்லி, ஜூலை 11— பின்லாந்து அமைதிக்குழு செயலாளர் பிரதமர் இந்திரா காந்திக்கு எழுதியுள்ள கடிதம் ஒன்றில் இந்திய அரசுடனும், மக்களுடனும் ஒருமைப்பாடு தெரிவித்துள்ளார். இந்திய ஆட்சி உரிமைக்கும், சுதந்திரத்துக்கும். அதன் அமைதி, நட்புறவு கொள்கைக்கும், ஊைத்து சமூக முன்னேற்ற முயற்சிகளுக்கும் எதிராக ஏகாதிபத்தியத் தூண்டுதலில் சூழ்ச்சிகள் தோன்றியுள்ள இத்தருணத்தில் இந்திய அரசுடனும், இந்திய மக்களுடனும் பின்லாந்து அமைதிக்குழு ஒருமைப்பாடு தெரிவித்துள்ளது. இந்திரா காந்தியின் தீரம் மிக்க போராட்டத்திற்கு பின்லாந்து குழு முழு ஆதரவு தருவதாக குழுவின் செயலாளர் அந்தக் கடிதத்தில் எழுதியுள்ளார்.

## திருமணம்

சென்னை, ஜூலை 11— வி. என். கங்காதர முதலியாரின் இளைய சகோதரி லலிதாவுக்கும் சென்னை, சூளை பட்டாளம் ஜெயராம முதலியார் குமாரன் ஜோதி என்கிற விஜயசாரதிக்கும் (இன்ஸ்பெக்டர், இண்டியா பிஸ்டன் நிறுவனம்) சென்னை, பெரம்பூர் ஈஸ்வரி திருமண நிலையத்தில் நேற்று திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

# பழுதுபார்த்தபோது கிணறு இடிந்து விழுந்து இரண்டு பேர் சாவு

**பட்டுக்கோட்டை, ஜூலை 11—பழைய கிணற்றை பழுது பார்த்துக்கொண்டிருந்தபோது கிணறு இடிந்து 2 பேர் புதைந்து மாண்டனர்.**

பட்டுக் கோட்டையை அடுத்த தெற்குக் கோட்டை கிராமத்தைச் சேர்ந்தவர் மிராசுதார் ராமசாமி பணி கொண்டார்.

சம்பவ தினத்தன்று பிற்பகலில் அவருக்குச் சொந்தமான பழைய கிணற்றைப் பழுது பார்த்து சிமெண்டினால் கட்டிக் கொண்டிருந்தனர்.

பட்டுக்கோட்டையைச் சேர்ந்த முத்து (வயது 28) காண்டீபன் (வயது 21) ஆகியோர் கிணற்றுக்கு நடுவில் குறுக்கே கருங்கல் வைத்து சிமெண்ட்பூசிக்கொண்டிருந்தனர்.

அப்போது திடீர் என்று கிணறு இடிந்தது. மணல் சரிந்து முத்து, காண்டீபன் ஆகிய 2 பேர்களும் மணலில் புதையுண்டனர்.

உடனே இதுபற்றி பாப்பாநாடு போலீசுக்கு தகவல் கொடுக்கப்பட்டது. போலீசார் விரைந்து வந்தனர்.

கிணற்றைதோண்டி மணலை அகற்றி முத்து, காண்டீபன் ஆகியோரின் பிணத்தை மேலே கொண்டு வந்தனர்.

பிறகு அவர்களுடைய பிணங்கள் பிரேத விசாரணைக்கு அனுப்பப்பட்டன.

இறந்து போன முத்துவுக்கு திருமணமாகி மனைவியும், 2 குழந்தைகளும் உள்ளனர். காண்டீபனுக்கு திருமணமாகவில்லை.

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஜூலை 11—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 556 00

22 காரட்) சில்லரை கிராம் ரூ. 52 75

**வெள்ளி**

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 1220 00

உள்ளூர் 1130 00

(வெள்ளி 10 கிராம்) ரூ. 12 30

**மணிலாப்பயறு**

கோடைகால பட்டாணி மொத்தவிலை 258 00

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 670 00

சில்லரை விலை ரூ. 7 70

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்கு டெலிவரி திருப்பத்தூர் மொத்த விலை ரூ. 400 00

சேலம் தாமரை அன்னம் மார்க் 16 05 கி. கி.) ரூ. 70 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் ரம்.எஸ்.மார்க் ரூ. 134 00 முதல் 135 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 137 00

விற்பனை வரி தனி 139 00

சில்லரை லிட்டர் 1-க்கு ரூ. 9 00

**கடலைப்பிண்ணாக்கு**

கி.கி. கொண்ட மூட்டைக்கு எக்ஸ்பெல்லர் ரூ. 70 00

# மாடர்ன் ரொட்டி விலை குறைப்பு

புதுடெல்லி, ஜூலை 11— மாடர்ன் ரொட்டியின் விலை 400 கிராமுக்கு 10 காசு வீதம் குறைக்கப்பட்டிருக்கிறது. இந்த விலை குறைப்பு உத்தரவு இந்தியா பூராவிலும் இன்று முதல் அமுலுக்கு வருகிறது.

நடைமுறையில் இருந்து வரும் இந்திய பாதுகாப்பு சட்டப்படி டெல்லியில் ஏற்கனவே மாடர்ன் ரொட்டியின் விலை குறைக்கப்பட்டு விட்டது.

இந்த தகவலை மாடர்ன் பேக்கரீஸ் நிறுவனத்தின் தலைவர் முஷீர் அகமது நேற்று டெல்லியில் நடந்த நிருபர்கள் கூட்டத்தில் அறிவித்தார்.

"மாடர்ன் ரொட்டி" மற்றும் பிஸ்கெட் போன்ற உணவு பொருட்களை உற்பத்தி செய்யும் இந்த நிறுவனம் மத்திய அரசால் நடத்தப் பட்டுவருவது தெரிந்ததே.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.

Editor-in-charge: G. Dhanaraj.